# காதற் பாட்டு



ஆசிரியர்: **ராய. சொ.**

ஐம்புலன்களின் இன்பத்தையும் ஒரே காலத்தில் அளிக்கும் இக்காதல் வாழ்வை தமிழர் ஒரு கலையாகவே வளர்த்து வந்தனர். உலக வளர்ச்சிக்காக மாயா சக்தியால் ஏவப்பட்ட காந்த சக்தியே காதல். அதிலிருந்து தப்ப யாராலும் முடியாது. பழைய இலக்கியங்களில் எல்லாம் காதற் சித்திரத்தை நிறையக் காணலாம். அவ் இலக்கியங்களிலிருந்து இன்றைய தமிழ் மக்கட்குத் தங்கள் முன்னோர்கள் வாழ்ந்த காதல் வாழ்வை எடுத்துக் காட்டும் வகையில் அமைந்திருக்கிறது இந்நூல்.

கலிகோ ரூ. 3 8 0

சாதா ரூ. 3 0 0

கம்பன் கழக வெளியீடு ௩

# கம்பன் பிள்ளைத் தமிழ்



புதுக்கோட்டை மகாராஜா கல்லூரி
தலைமைத் தமிழாசிரியர்
நா. கனகராஜய்யர் B. O. L
இயற்றியது.

கம்பன் கழகம் :: காரைக்குடி

விற்பனை உரிமை

இலக்கியப் பதிப்பகம்
காரைக்குடி.

விற்பனை உரிமை :

இலக்கியப் பதிப்பகம்

காரைக்குடி




[விலை ரூபா ஒன்றேகால்]

S. I. P. காரைக்குடி P. I. C. R/10, 1000.
நவயுகப் பிரசுராலயம், காரைக்குடி P. I. C. R. No. 68 A.

# பதிப்புரை

கவிச் சக்கரவர்த்தி கம்பன் பால் நண்பர் நா. கனகராஜய்யர் அவர்கட்கு எல்லையில்லாத ஈடு பாடுண்டு. அவன் கவிதையிலே திளைத்து இன் புறும் பேறும், வாய்ப்பும் உடையவர். அதன் பயனே இப்பிள்ளைத் தமிழாக உருவெடுத்திருக் கிறது. கம்பன் கருத்தும், சொல்லும் அங்கங்கே இவர் செய்யுள்களில் ஒளிவிடக் காணலாம். மெய் யன்பு ஒன்றே காரணமாகத் தமிழ்ப் பெருங் கவி மணிக்குச் சூட்டப்படும் இப்பிரபந்தத்தைத் தமிழ கம் வரவேற்கும் என்பதில் எங்கட்குச் சிறிதும் ஐயமில்லை.

உண்மை அன்புடன் இதனை ஆக்கி அளித்த ஸ்ரீ நா. கனகராஜய்யர் அவர்கட்கு எங்கள் மனப் பூர்வமான நன்றி.

**சா. கணேசன்**

செயலாளன்

கம்பன் கழகம், காரைக்குடி

# முகவுரை

கம்பன் பிள்ளைத் தமிழைக் காரைக்குடியில் நிகழ்ந்த கம்பர் விழாவில் அரங்கேற்றத் துணிந்து வந்து, விக்கிரம ஆண்டு பங்குனித் திங்கள் இருபத்தேழாம் நாள் புதன்கிழமை இரவு எட்டு மணிக்குத் தூத்துக்குடிக் கம்பன் கழகத் தலைவர் திருவாளர் பால் நாடார் அவர்கள் தலைமையிற் சில பாட்டுக்கள் படித்துச் சொல்லும் பேறு பெற்றேன். இருபத்தொன்பதாம் நாள் வெள்ளிக்கிழமை யன்று நாட்டரசன்கோட்டையில் கம்பர் திருக்கோயிலின் முன் மண்டபத்தில் முழுவதும் அரங்கேற்றிப் பல புலவ ரும் பிரபுக்களும் கேட்டு உவக்கும் பேற்றையும் பெற் றேன். கேட்ட பலரும் இப்பிரபந்தம் அச்சுருப் பெற்று உலகிற் பரவுதற்குரியது என்ற கருத்தை உவப்போடு தெரிவித்ததாலும் தமக்கே இம்முயற்சியில் ஊக்கம் பிறந்த தாலும் காரைக்குடிக் கம்பன் கழகச் செயலாளர், திருவா ளர் சா. கணேசன், இந்நூலை அச்சிட முன் வந்துளர். அவர்க்கும் இத்துறையில் எனக்கு ஊக்கம் உதவிய தமிழ்ச்சுவை கண்ட கம்பனன்பர் பலர்க்கும் எனது உள் ளங் கலந்த நன்றியுரைகள் உவப்போடு கூறப்பெறுகின் றன. பண்டையோர் சென்ற முறையிற் பிரபந்தங்கள் பாட அறியேனாயினும் மகாகவிகள் வாக்குகளைத் தக்க முறைகளால் அடியேற்றிப் பாடிய இப்பிரபந்தத்தில் "பனிமா லிமயப் பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங் காக்கையும் பொன்னிறமாய் இருக்குமென் றிவ்வா றுரைக்கு மன்றோ இவ்விருநிலமே" என்ற அமுதசாகரர் காரிகையின் உண்மை இயல்பாக வெளிப்படும் என்று துணிந்து இத்திருப்பணியைத் தமிழகத்தார்க்கு அர்ப் பணம் செய்கின்றேன்.




மகா வித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடியுள்ள பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்களில், பாயிரம் என்ற பகுதி யொன்று நூற்குப் பொருத்தமாக அழகுற அமைந்திருப்பது கண்டு, அம்முறையே தழுவி இப் பிரபந்தத்திலும் பாயிரம் அமைக்கப் பெற்றுளது. காப்பு, செங்கீரை, சிறு தேர் என்ற மூன்று பருவங்களில் பதினொரு செய்யுட்களும் மற்ற வற்றில் பத்துச் செய்யுட் களும் அமைத்து இப்பிரபந்தம் பூர்த்தி செய்யப் பெற் றுளது. உலகப் பெரும்புலவர் என்ற உண்மைப் புகழ்க் குரிய கம்பன் திருநாமத்தின் சிறப்பையும் புலமை வளத் தையும் அளந்து புகழப் பதினாயிரம் செய்யுட்களைக் கொண்ட பிரபந்தம் அமைப்பினும் பற்றாது என்ற உண் மையை நன்கு உணர்வேனாயினும், எனது சிறுமையை யும் கம்பர் பெருமையையும் தூக்கிப் பார்க்க இப்பிரபந் தமே துலையாகும் என்று துணிந்தே நாணமும் அச்சமு மின்றி இதனை வெளியிடலாயினேன்.

**நா. கனகராஜன்**

ஸ்ரீ:

கடவுள் துணை

# கம்பன் பிள்ளைத் தமிழ்

## பாயிரம்

### விநாயகர்

உள்ளமுற வழிபடுஉம் அடியவர்கள் நன்னெறி
உஞற்றுவினை நன்கு நிகழ
உரியஅருள் புரிவதே கடனெனக் கொண்டருளும்
உம்பல்முக நம்பி கழல்கள்
வெள்ளமென அமுதுநிகர் தமிழ்மொழிக் கவிமலர்கள்
வேணவா வொடுக ரியமால்
மென்மலர்க் கழலிணைக் குரிமைசெய வருபுலமை
மிக்கநன் மாற முனிவன்
கள்ளமறு பத்திநெறி உலகுகொள அந்தாதி
கழறியருள் கம்ப நாடன்
கருணைபொழி தாசரதி உருவமே நிலவியுயர்
கதிநாடு நெஞ்ச முடையான்
வள்ளலென உலகுசொல வந்தபுகழ் நாவலவன்
வண்புகழை நன்கு புகல
வருகின்ற பிள்ளைத் தமிழ்க்கவிதை தழையவே
வாழ்த்திமுடி தாழ்த்து துமரோ (1)

### இராமபிரான்

உலகினிடை மறமலிந் தறவொளி மழுங்கியே
உத்தமர்கள் துன்ப மெய்த

உள்ளமொடு தீயவினை புரிகின்ற பாவியர்கள்
ஓங்கியுயர் கால மதிலே
நலநெறியை முறைமையுற நாட்டும்வினை புரியவே
ஞாலமிசை யான்வரு குவன்
நல்லவர்கள் வாழ்வுபெற அல்லவர்கள் வீழ்வுபெற
ஞானநெறி ஓங்கி யுயர
அலகிலென தாற்றலை விளக்கிடுவன் என்றுமுனம்
ஆணையின் அறைந்த மொழியால்
அருளுருவம் இலகவே திருஆழி சங்கின்றி
அரசுதரு தந்தை மொழியார்
குலநெறியும் மரபியலும் வளரவரு பணிபூண்ட
கோதண்ட பாணி யென்னும்
குணநிதியின் அடிமலர்கள் கம்பர்புகழ் தழையவே
கும்பிட்டு வழிப டுவமே. (2)

## சீதாபிராட்டியார்

பொறையுங் கற்பும் இற்பிறப்பும்
பொருந்திப் பெண்மைஉருப் புனைந்து
புவியும் விண்ணும் வியப்பெய்தப்
பொருபோர் வீரன் வில்லாற்றற்கு
இறையும் பொருந்தா தெனுங்கருத்தால்
எல்லை யில்லா உலகங்கள்
இமையிற் சுடுமென் சொல்வலியை
ஈங்கு விளக்கேன் எனப்புகன்று
சிறையுள் இருந்த செல்விகழல்
சிந்தை நிறைத்து வழுத்திடுவாம்
தெளியப் பெறுத பெரும்பொருளைத்
தெள்ளத் தெளியத் தமிழ்மொழியால்
மறையுள் இலங்கும் வள்ளலென
மன்னன் மகனும் இராமனென

வழங்குங் கம்ப நாடுடைய
வள்ளல் புகழை வளைபணிக்கே (3)

### இளைய பெருமாள்

வில்லை ஊன்றிய கையினன்
வெய்து யிர்க்கு முகத்தினன்
வேதம் ஓதி யுணர்ந்திலா
மெய்ம்மை ஓர்ந்திடு நெஞ்சினன்
புல்லை ஆய்ந்து விரிப்பதும்
பூக்கள் தேர்ந்து தொடுப்பதும்
புதிய சாலை அமைப்பதும்
புலமை கொண்டு பயின்றவன்
நல்ல தீங்கனி தேடலும்
நாய கற்கவை நல்கலும்
நாவில் நீர்படல் இன்றியே
நாளும் அல்லும் விழித்தலும்
வல்ல வாறு புரிந்தவன்
மலர்ப்ப தங்கள் வணங்குவாம்.
மாத வம்புரி கம்பனார்
வண் புகழ்க்கவி வாழவே (4)

### பரதாழ்வான்

அன்னையிரு வரங்களினால் பெற்று நல்க
அத்தனறி விழந்ததனை யளித்துச் சேர
அருந்தவரு மமைச்சர்களு மரசை யேற்றல்
அடைவேயென் றுருபடியா அறையா நிற்க
என்னைபுரி கொடுமையினுங் கேடு சூழ்ந்தீர்
இறையுரிமை மூத்தவற்கே யெனக்கிங் கில்லை
யெனப்புகன்று வனம்புகுந்து தந்தை மெய்ம்மை
யிகவாத பணிபூண்ட இராமன் தந்த

தன்னைநிகர் அடிநிலையைத் தலைமேல் தாங்கித்
தலைமையதற் களித்ததன்கீ ழடிமை யாகத்
தமதுகுலத் துரிமையினை யறங்கோ ணாது
தாங்கிநின்ற பரதாழ்வான் சரண மென்னும்
பொன்னைவெலும் உயர்வுபொது பதுமந் தன்னைப்
புரைதவிர்ந்த வுளத்தினொடு போற்றி நிற்பாம்
புலமைநெறி அன்புநெறி பொருந்து கம்பன்
புகழ் வளர்க்குந் தமிழ்ப்பனுவல் பொலிக என்றே (5)

### சத்ருக்னன்

கானரசு புரிவதற்கா நிலமகளைக் கைவிட்டுக்
கற்புநெறித் திருவிளக்கம் உடன்வரவே நடந்தருளும்
கரியமுகில் உருவமுள காகுத்த வள்ளலையே
கதுவிவரு நிழலெனவே காதலொடும் அவன்பின்பு
போனவனும் ஒருதம்பி போனவர்கள் வரும்அவதி
போயினதே யெனக்கருதிப் புகையினொடும் அழல் வளர்த்துப்
புகுவல்யான் எனப்புகலும் புண்ணியனும் ஒருதம்பி
புவியரசு முடியினொடும் பொருந்துவதே யெதிர் பார்க்கும்
யானுமொரு தம்பியென உலகினிடை ஏன்பிறந்தேன்
எனைப்பயந்த அன்னையர்க்கும் என்முன்னே பிறந்தார்க்கும்
இழிதகவு தருவதற்கோ எனப்புகன்று பரதன்விழும்
எரியினவன் முனம்விழவே யெழுந்துநடந் தருளினை யோன்
கூனியினை யொறுப்பதற்கே கொடுஞ்சினத்தாற் புறப்பட்டுக்
கோமுனியும் எனப்பரதன் கூறுமள வடங்கிஅவன்
குளிர்மலர்ப்பூங் கழல்பணிந்து கும்பிட்டுப் பரவிடுவாம்
கோதகன்ற கம்பனெனுங் குலகவிசீர் தழைத்திடவே

**வான்மீகர்**

அறிவுக் கரிய திருமாலே
அளியின் பெருக்கால் இராமனென
அடைந்தான் என்னும் உண்மையினை
அகில உலகம் அறியஅருள்
அறிவக் குழுவின் சிகாமணியாம்
அரிய தவத்து வான்மீகர்
அதுலப் புலமைப் பெருவள்ளல்
அணிகொள் கழல்கள் பரவிடுவாம்
நெறியிற் புகுந்து திருமாலை
நேடி யடையுஞ் சடகோபர்
நிலவு நெஞ்சுங் கலைமகளார்
நிலைக்கு நாவும் உளபுலவன்
குறியிற் பிரிந்த பரம்பொருளைக்
கோமான் மகனும் இராமனெனக்
கொள்ளுங் கம்ப நாடனிசை
குலவும் பனுவல் தழைத்திடவே. (7)

**நம்மாழ்வார்**

பிறந்த உயிரைப் பற்றுகின்ற
பிழைச் சடத்தை முனிந்தருளிப்
பெருமால் குருகூர்த் திருக்கோயில்
பிறங்கும் புளிக்கீழ் விற்றிருக்கும்
சிறந்த முனிவர் எழுத்தமையாச்
செயல்கொள் சுருதி நுண்பொருளைத்
திருவாய் மொழியாத் தமிழிலருள்
தேவர் கழல்கள் பழிச்சிடுவாம்
மறந்த பொருளாய் உலகனைத்தும்
மயங்கா நின்ற பிரமத்தை
வள்ளற் பெருமான் இராமனென
வண்மைத் தமிழால் உணர்த்தவரும்

நிறைந்த புலமைப் புகழாளன்
நெஞ்சந் தமிழ்க்கே தரும்பெரியோன்
நிமலச் செல்வ நிலைபேற்றை
நிகழ்த்தும் பனுவல் தழைத்திடவே. (8)

## அனுமான்

இல்லாத உலகத்தில் எங்குமே ஈங்கிவன்
இசையின் பெருக் கெய்தவே
ஏற்றநெறி யாய்ந்துதன் நுண்ணுணர்வி னூற்பயன்
எய்திஉல குக்கு தவவே
கல்லாத கலைகளொடு வேதமாப் புகல்பெரிய
கடலுமென இளைய வன்முனே
கருணைவா ரிதியாய தாசரதி நாவினால்
கட்டுரைத் திடு புகழினன்
வல்லார்கள் எவருமே மனமருள நின்றபணி
அன்பினாற் செய்த அன்பன்
வாக்குமனம் மீறியுறு பொருளினைத் தெளிவாக
வஞ்ச மறு நெஞ்சின் உணர்வான்
பொல்லாத பெண்மயற் பேராழி குப்புற்ற
புலவனைப் போற்றல் செய்வாம்
புலனெறிச் செல்வனும் கம்ப நாடற்கமை
புதுப்பனுவல் வாழ்வு பெறவே (9)

## குகப்பெருமாள்

கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
கரியஇருள் மேனியினன் கணிப்பரிய திறமுடையான்
கரனில்வளர் களிற்றினமுங் கண்டஞ்சும் விற்பிடித்த
கானவராம் கடலுடையான் கனிந்துள்ளம் உருகு
மன்பான்

உங்கள்குலத் தனித்தலைவற் குயிர்த்துணைவன்
உயர்தோளான்
உவமையிலாப் பெருமையுளான் உவனென்று
சுமந்திரனே
உரிமையினுற் பரதன்முனம் உரைத்தபுகழ்
பொருந்துமவன்
உம்பர்தொழுங் கோசலையால் உரிமைமகன் எனப்
பெறுவான்
கொங்கலரும் நறுந்தண்டார்க் குகனென்னுந் திருப்
பெயரான்
குணநலங்கள் தேர்ந்துணர்ந்து கோமகனும்
பரதனையே
கோதண்ட பாணியினுர் குழுமிவரும் ஆயிரர்தாம்
குணநிதியே நினக்கிணையாக் கூறுகிலேன்
எனுமன்பன்
பொங்குபுகழ் மனத்தடைத்துப் பொருந்துநெறி
வழுத்திடுவாம்
புலமையினு லுலகறியும் புகழொடுநல் அன்புடைய
பொன்னிமலி தமிழகத்தின் புண்ணியப்பே ரும்புலவன்
பொருள்வளங்கொள் கம்பனிசைப் புதுப்பனுவல்
தழைத்திடவே (10)

## இராமனடியார்

நினைக்கவும் தொழவும் வழுத்தவும் தகுந்த
நிறைபரம் பொருளென அவனை
நெறியினு லுணர்ந்து கரியமே னியனும்
நிமலனை இராமனைத் தொடரும்
மனத்தினர் உலகின் மறைகளும் பிறவாம்
வகைவகைப் பனுவலும் பயின்று
மறுஅறு பெரியர் அன்பையே தமது
வாழ்வுறு பேறென மதிப்பார்
இனத்தினும் பிறப்பின் இயல்பினும் கல்வி
இயையினும் திருவினும் மிகவும்

இழிந்தவ ரேனவே உலகினர் மதிக்க
இயங்குவ ராயினும் கடலுண்
கனத்தினை வென்ற கருணைவா ரிதியைக்
கருத்தினில் அடைப்பதிற் சிறந்தோர்
கழல்மலர் பரவிப் போற்றுதும் புனைதும்
கம்பர்சீர்க் கவிதழைத் திடவே (11)

### தமிழ்ச்செல்வர்

இமிழ்கடல் உலகில் அடைந்தவர் குலத்தால்
இழிந்தவ ராயினும் பெருமை
எதுவுமே பொருந்தாச் சிறுமைய ரேனும்
ஏற்றத்தை எய்திடப் புரியும்
அமிழ்தென மதிக்குந் திருவினை மதியார்
அதுபெறு நெறியையும் நாடார்
அமலனைப் புகழ்ந்தே இகபரம் நிரம்பும்
அருளினை நாடுறும் மனத்தர்
தமிழெனுஞ் செல்வந் தமதென வுடைய
தகைமையர் தமக்கென வாழாத்
தலைமையைப் பொருந்தும் புலவரைப் புகழ்ந்து
தலையுறப் பணிவது புரிவாம்
கமழ்மலர் பறித்துக் கோவைகள் தொடுக்கும்
கருத்தறத் தமிழ்மலர்க் கோவை
காகுத்த வள்ளல் கழல்மலர்க் கமைக்கும்
கம்பர் சீர்க்கவி தழைத்திடவே (12)

### இயற்றமிழாசிரியர்

அண்டரும் பெறுதற் கரியபேர் அமுதம்
அடைந்தவர்க் கமுதவாழ் வருளும்
அருள்வளஞ் செறிந்த பொருள்நலம் பொலியும்
அருந்தமிழ் அடியனே பயிலத்

தொண்டரும் புலமைத் தலைவரும் புனைந்த
 தூய்மைசால் நூற்பெருங் கடலின்
சுவையினைத் தெளிந்து பவப்பிணி யகற்றத்
 துணைபுரி தமிழ்ப்பெருங் குரவர்
வண்டார்பண் பயிலுங் கமல மாலிகையை
 வணைந்திடும் மறையவர் குலத்தின்
மாதவன் அடிக்கே வழிவழி அடிமை
 வளம்புனை மரபினில் வருவார்
வண்டமிழ் மணக்கும் மலர்த்திரு வாயர்
 மறைத்திரு நாரண முனிவர்
மலர்க்கழல் புனைந்து போற்றுவல் கம்பன்
 மகிமைசொல் கவிதழைத் திடவே (13)

### அவையடக்கம்

ஆயிரங் கரங்கள் பரப்பினன் உலகில்
 அடைவுறும் இருளெலாம் அகற்றும்
அருட்பணி பூண்ட பரிதியம் பகவன்
 அளவறு கருணையை நாடிக்
கோயிலும் அமைத்துச் சிறியதோர் விளக்கம்
 குவிந்தகைத் தலத்தினி லெடுத்தே
குறைவறு பேற்றை அருள்கநீ என்னக்
 கும்பிடும் அவர்தமை நிகர்ப்பப்
பாயிரம் பொருந்து நான்மறைப் பொருளும்
 பழந்தமிழ்ச் செய்யுளுள் உறையும்
பயின்றனன் உணர்ந்து பாரகா வியத்திற்
 பயில்வுறும் இடமறிந் தமைக்கும்
மாயிரும் பெருமைக் கம்பனும் புலவன்
 வள்ளன்மை தமிழுல கறிய
வழுத்திய பிள்ளைத் தமிழ்அவன் அருளால்
 வழுத்தவிர்ந் துயர்தலு முளதே (14)

# 1. காப்புப் பருவம்

## திருமால்

திருப்பாற் கடலில் அரவணையில்
திருமா மகளார் அடிவருடத்
தெளிந்த யோகத் துயில்புரியுஞ்
செயலைத் துறந்து புவியினிடைக்
கருப்பாற் பிறந்த உயிர்க் கணங்கள்
கழலே புணையாப் பிறவியெனுங்
கடலைக் கடக்க அருள்புரியும்
கருத்தால் விபவ உருஅடைந்து
பொருப்பாற் குடையைக் கவித்தருளிப்
பொன்னாட் டரசு பொழிமுகிலைப்
புனிற்றான் நிரையும் கோவலரும்
போத மருண்டு வெருவாமே
விருப்பால் தடுத்த பெருமானை
வேண்டி வணங்கித் தொழுதிடுவாம்
வியன்சீர்க் கம்ப நாடுடைய
விபுதச் சிசுவைப் புரக்கவென்றே (1)

## சிவபிரான்

குணங்கள் மூன்றுந் தொழிலைந்தும்
குலவும் ஒருமைக் குறிப்புணர்த்திக்
குமரப் பெருமான் பிரணவத்தைக்
கூறக் கேட்டும் விளையாடல்
பணங்கள் அணிந்த முடிவணங்கிப்
பலருங் காண நடித்தருளும்

பழமை புதுமை கடந்துநின்ற
பரமன் கழல்கள் பரவிடுவாம்
மணங்கள் நயங்கள் சுவைகளெலாம்
வானோர் அமுதின் மிகப்பெருகி
வளர இராம பிரான்கதையை
மகியோர் சுவைக்கத் தமிழ்மொழியில்
இணங்க இனிய கவிதைகளால்
இயற்றி யருள அவதரித்த
இயலும் இசையும் நிறை கம்பன்
எனுநற் குழவைக் காக்கவென்றே (2)

**விநாயகர்**

வியாதனுர் முந்தை வடமொழி யாப்பின்
விரித்தருள் பாரதக் கதையை
மேருவின் சிகரத் தொருமருப் பதனல்
விருப்புடன் எழுதிய பெருமான்
கயானனன் எனவே அன்பர்கள் முன்னர்க்
காட்சிதந் தருள்பரங் கருணைக்
கடலின திருசே வடிகளை நினைந்து
கருத்துறப் புகழ்ந்துவாழ்த் திடுவாம்
புயாசல மதனுற் சிவதனு வாகும்
பொருப்பினை வளைத்திறுத் தருளும்
புண்ணிய மூர்த்தி புகழினைத் தமிழாற்
புவியினர்க் கமுதமா அருளும்
தயாகுண நிறைந்த காரணக் கொடையான்
தனிப்பெரு மரபினை விளக்கும்
தமிழிளங் கன்றைக் கம்பநா டியற்றுந்
தவத்தினைக் காத்தருள் கென்றே (3)

**முருகப் பெருமான்**

ஒருமுகம் வேதத் துறுபொருள்விளக்க
ஒருமுகம் யோகியர்க் குதவ

ஒருமுகம் அடியார்க் குரிய வாழ்வருள
ஒருமுகம் தமிழ்பயின் றுணர
ஒருமுகம் பரிதி ஒளியினை நல்க
ஒருமுகம் காதல்வாழ் வுகக்க
உரிமையாற் படைத்த பன்னிரு கரமும்
ஒவ்வொரு முகத்தினுக் கேற்ற
கருமமே பூணக் கருணையி னுருவாய்க்
கவினிய அறுமுகக் கடவுள்
கழல்மலர் மனத்தால் நாவினால் கையால்
கருதியே பழிச்சுவம் தொழுவாம்
அருமைய தமிழத் திருப்பணி புரிந்தே
அருள்நெறிப் புலமையை நாட்டும்
அமுதமுண் குழவி கம்பநா டுடைய
அரசினைக் காத்தருள் கெனவே (4)

## நான்முகன்

மறையொரு நான்கு முயன்று நன்கோதி
மற்றவை சொற்றருள் வழியே
வகைவகை யாக வுயிர்களைப் படைக்கும்
வன்மைபூண் டுளபெரும் பகவன்
குறைவறு கலையை யுருவமாப் புனைந்த
குமரியை நாவினில் இருத்திக்
குணமிகு நலங்கொள் நெறியினர்க் கறிவு
கொடுத்தருள் திசைமுக னென்னும்
இறையவன் கழல்கள் தகுந்தவா பணிவுற்
றேத்தியே நினைந்திடல் புரிவாம்
இயற்றமிழ்க் கடலில் அறிவுமத் தழுத்தி
இராமன்மெய்ச் சரிதமாம் அமுதம்
முறையினில் அருளுந் திருப்பணி தாங்கி
முத்தமிழ்ப் புலவர்கள் தலைமேல்

முளைத்ததாள் உடைய கம்பனும் புலமை
முதல்வனைக் காத்தருள் கெனவே (5)

**இந்திரன்**

மகங்களிற் சிறந்த பரிமக சதத்தின்
மகிமையால் மகபதி யாகி
வாசவத் தகுதி அடைந்து பைந்தருவும்
வளமிகு நிதிகளும் வருவோர்
அகங்களிற் கருதும் பேறெலாம் அருளும்
அரியதோர் மணியும் நற்பசுவும்
அமைவுடன் தன்பால் ஏவல்கேட் டிருப்ப
ஆண்டருள் தலைவனைப் பணிவாம்
நகங்களிற் சிறந்த பொதியத்தில் வாழும்
ஞானமா முனிவர்நூல் இயற்றும்
நறுந்தமிழ்ச் செல்வம் நிரம்புறப் படைத்து
நானிலத் தரசர்தம் இனத்தின்
முகங்களிற் றமிழாம் மதுவையே நுகரும்
மும்முடி மன்னவர் போற்றும்
முறைமைபூண் பெருமைக் கம்பநா டுடைய
முத்தமி ழரசுவாழ் வுறவே. (6)

**திருமகள்**

வைய முழுதும் வயிற்றடக்க
வல்லாற் கமைந்த துணையாகி
வாழ்வும் நலமும் உயிர்களுக்கு
வழங்கும் உரிமை பூண்டருளும்
செய்ய கமலக் கோயில்வளர்
திருமா மகளைத் தொழுதிடுவாம்
தென்னர் தமிழைப் பயின் றுணர்ந்து
சேர சோழ பாண்டியர்கள்

பொய்யி லடிமை தனக்கெனவே
பொருந்த வாழும் வரம்படைத்த
புலமைச் செல்வன் ஏருழுவார்
புகழை உலகோர் தெளிய அருள்
செய்ய நாவின் திறம்படைத்த
தெய்வத் தமிழப் பசுங்குழவி
சீதை கொழுநன் புகுந்துறையும்
சித்தத் தவனைப் புரக்கவென்றே (7)

### கலைமகள்

வெண்மைக் கமல மலர்த்தளியில்
விண்ணோர் பரவ வீற்றிருந்து
வேதம் உணரும் திசைமுகற்கு
வேண்டும் துணையா விளங்குகின்ற
உண்மைப் படிக நிறத்தினளை
உயரும் வீணைக் கரத்தினளை
உடுக்கும் வெண்மை யுடையினளை
உளத்தால் நினைந்து பரவிடுவாம்
திண்மைப் புலமைத் திருவருளிச்
சிலம்பும் உதவி அவளாண்ட
செயல்கொள் தமிழப் பெருஞ்செல்வன்
சென்னி நாட்டுத் திருவழுந்தூர்
வண்மை விளங்கும் வெண்ணெய் நல்லூர்
வாழுஞ் சடைய வள்ளல்தரும்
வளத்தால் தமிழ முடிபுனைந்த
வள்ளற் சிசுவைப் புரக்க வென்றே (8)

### துர்க்கை

மனித்தர்கள் புரியும் நல்லறங் கெடுத்து
வானவர் வாழ்வினைக் குலைக்கும்

வலிமையைப் பெறுவான் கடுந்தவம் உஞற்றி
வழியலா வழியின்மேற் செல்லும்
இனத்தராம் அவுண குலத்தினர் மறத்தின்
ஏற்றமே வளர்ந்திடச் செலுத்தும்
எருமையி னுருவ மெடுத்தவோர் தலைவன்
இறுதியைப் பெறுவதன் பொருட்டால்
இனித்ததன் குணங்கள் எளிதினின் மாற்றி
எறுழ்வலிக் கோளரி ஊர்ந்தே
எஃகமும் வாளுஞ் சூலமுந் தாங்கி
யிருஞ்சமர் புரிந்தருள் இறைவி
சினத்தினில் அருளின் திருவொளி விளக்கும்
திருவடி முடிமிசைப் புனைவாம்
செந்தமிழ்ப் புலமைக் கம்பநா டுடைய
திப்பியக் குழவிவாழ் வுறவே (9)

**சத்த மாதர்**

வெள்ளிய எகினம் ஊர்ந்தருள் அணங்கு
விடையினை ஊர்திகொள் மடந்தை
விருப்புற மயூர மேல்வரும் அரிவை
மிகுவலிக் கலுழனை உகைப்பாள்
ஒள்ளிய சிங்க வாகன மங்கை
உயரயி ராவதத் திறைவி
உவப்பினுல் கழுதுப் பரியுடைத் தலைவி
யுரைத்தலிவ் எழுவரைப் பணிவாம்
வள்ளியர் வணங்கி வழிபடத் தகுந்த
வள்ளலெம் இராகவன் புகழை
மாநிலம் அறிய வான்மிக முனிவர்
வழங்கிய நெறியைநன் கறிந்து
தெள்ளிய இனிய விழுமெனும் மொழியால்
செழுந்தமிழ் யாப்பினுல் உலகு

தெளிந்திட மழலை மொழிந்தருள் குழவி
திருவுறு வாழ்வடை கெனவே

## முப்பத்து முக்கோடி தேவர்

முன்னைநாள் இருந்த நல்லிசைப் புலவர்
மொழிந்தன அனைத்தும் உள்ளூற
முறைமுறை பயின்று திசைமுகன் தலைவி
முழுத்திரு அருளையு மருவி
என்னையா ளுடையன் இராமனே யென்ப
தியாவரு மறிதிரென் றிசைக்கும்
இனியபைந் தமிழன் இரணிய வதத்தை
யேற்குமா றிடமறிந் தமைத்துத்
தன்னையே நிகரு மறைமுடிப் பொருளைத்
தமிழினல் விளக்கிய தலைவன்
சடையப்ப வள்ளல் புகழினை உலகர்
தலையினல் தாங்கவே தந்தான்
மன்னையே மதியாப் பெருமித மனத்தன்
வள்ளலெங் கம்பனைக் காக்க
வளருமுப் பத்து மூன்றொரு கோடி
வானவர் தமைவணங் குதுமே.

## 2. செங்கீரைப் பருவம்

வந்தனைக் குரியபொருள் காகுத்தன் எனஉணரும்
    மாருதியின் வாய்மொழியினல்
வானவரு மண்ணவரும் வாழ்வுபெற வந்தருளும்
    வள்ளலுரு விள்ளு நினைவால்
கந்தமிகு கமலநிகர் செங்கணோர் வில்லியவன்
    கடவுளரும் முனிவர் இனமும்
கருதரிய வினைமுற்ற உலகினிடை வந்தவன்
    கரையிறந் துறு புகழினன்
அந்தநடு வாதியினில் ஆரணங் காட்டலா
    அறிவினுக் கறிவும் அவனே
அரியதிரி சூலமொடு திகிரிசங் கம்கரகம்
    அவைமறைய வொருவில் ஏந்திச்
சிந்தனை நிரப்புமவன் என்றுபுகல் வண்புலவ
    செங்கீரை ஆடி அருளே
செந்தமிழ்ச் செல்வமுறு கம்பப் பசுங்குழவி
    செங்கிரை ஆடி அருளே (1)

கஞ்சமொத் தலர்கின்ற கண்ணுடைய வள்ளல்புகழ்
    கவுசிகர்தம் வாய்மொழியினல்
காட்டலா காதபொருள் யாஞ்ஞுவற் கியமுனிவர்
    கழறவே உணரும் அரசன்
நெஞ்சமொத் தறியவே தியவினை முன்செய்த
    நெடியதீ வினையினலும்
நேர்மையுறு நல்லவினை செய்தநல் வினையாலும்
    நீள்நிலத் தவதரித்தான்
வஞ்சமற யான்புரி தவத்தினற் பெற்றிந்த
    வள்ளலுக் கிந்த பண்டைகள்

வழங்கும்யான் அஞ்ச இவன் ஏவலைப் பூணுவன
மன்னனே காணு யெனச்
செஞ்சுடர்த் திருமரபின் வென்றியைப் புகல் விபுத
செங்கிரை ஆடி அருளே
செந்தமிழ்ச் செல்வமுறு கம்பப் பசுங்குழவி
செங்கிரை ஆடி அருளே (2)

பொய்வண்ண முடன்வந்த மகபதிசெய்
கொடுமையால்
பொற்பி ஞெடு கற்பழிந்தே
புவியினோர் இகழவரும் அகலிகைக் கல்லுருவம்
பூழிபட் டளவில் எழவே
இவ்வண்ணம் நிகழுமிது தாசரதி யேந்தலே
யினியிந்த வுலகுக் கெலாம்
இயலுய்தி வண்ணமே துயர்வண்ணம் இனியில்லை
இருளுரு அரக்கி சமரில்
மைவண்ணம் வென்றுயரு மழை வண்ண
வண்ணலின்
வலிமிக்க கையின் வண்ணம்
மதித்தறிந் தனனிங்கு கால்வண்ணம் நன்குணரும்
வரய்ப்படைந் தேன்என்னவே
செய்வண்ண முனிமொழியில்ஓதியருள் திருவாய
செங்கிரை ஆடி அருளே
செந்தமிழ்ச் செல்வமுறு கம்பப் பசுங்குழவி
செங்கிரை ஆடி அருளே (3)

ஈறிலா நல்லறம் பார்த்திசைக் கின்றனன்
இன்னவட் சிறிநின்றே
இவ்வண்ணம் ஓதிலேன் தாடகைப் பாவிக்கு
இரங்குவ தறச் செயலிலை
கோறிநீ யென்னவே கோசிகப் பெருமுனிவர்
கூறுதலு மெய்யு ணர்ந்த

குருமணிநின் ஆணையே வேதமாக் கொள்வல்யான்
கொள்கையிற் பிழை எய்திடேன்
மாறிலா நெறிசெல்வன் எனஅமுத மயமான
வாய்மொழியின் வள்ளல் சொல்லி
வழிசெலாப் புல்லர்க்கு நல்லோர்சொல்
மொழியென்ன
வலியள் உரம் உருவு செயலைத்
தேறியே தெளிவித்த கவிச்சக்ர வர்த்தியே
செங்கீரை ஆடி அருளே
சென்னித் தமிழ்க் குரிய பொன்னித்துறைப் புலவ
செங்கீரை யாடியருளே (4)

வையகத் தலமுழுதும் வறியனே ஓம்புமொரு
வயலென்ன வோம்புகின்ற
மன்னனிவன் என்னவே தயரதன் புகழ்புனையும்
வாய்மொழிப் புலவர் மணியே
கையகத் துறுநெல்லி யங்கனி நிகர்ப்பவே
காண்டிநீ என்ன அனுமான்
காகுத்த வள்ளல்தரு கணையாழி யொடுநின்ற
காட்சியை விளக்கு கவியே
மெய்யகத் துணர்கின்ற முனிவரர்தம் மொழியினல்
வேந்தனு மனந்துணிந்தே
மெய்யினுயிர் பிரிவது நிகர்ப்பவே மக்களை
விடுத்த செயல் சொற்ற அறிவ
செய்யவளும் நாமகளும் மொன்றியுறு கம்பனே
செங்கீரை ஆடி அருளே
சென்னித் தமிழ்க்குரிய பொன்னித் துறைப்புலவ
செங்கீரை ஆடி அருளே (5)

அம்பியல் விழியின ராயிர மகளிர்தம்
ஆர்வம் வளர்த்திடவே
அஞ்சொலின் இளையவர் இருவரும் முனிவர்பின்
அங்கு புகுந்தளவே
வெம்பிய வுளனொடு தம்பரி வுரைசெயும்
மிதிலையின் வாழ்பவர்தாம்
வித்தக விழிகொடு தோளிணை கண்டனர்
வேறுள காண்கிலரே
அம்புயம் வென்றுள தாளின் விழித்தவர்
அங்கரம் நோக்கினவர்
அவைகளை அன்றியே பிறவுள அவயவம்
ஆய்கில ரெனு மொழியாய்
செம்பியர் திறைபெறு கம்பநல்நாடனே
செங்கோ செங்கிரை
திவிய தமிழ்வளர் நாவியல் புலவனே
செங்கோ செங்கிரை (6)

ஆடக வரைநிக ராகிய தனுவினை
அன்புறு முனிவர்பிரான்
ஆணையின் எளிதினி ராகவ குலமுதல்
அமரர் வியப்புறவே
தேடரு மொளிமணி யாகி இலங்கிய
சீதை யெனும் பெயர்பூண்
செல்வியினெழில்கனி சயமர மங்கள
சீதள நாண்மல ராம்
ஏடவிழ் மாளிகை இங்கிது காணென
யாவரு மென்னுறவே
இனிய முகத்தொடெடுத்தனை யென்னன
இயம்பிய நாவலவ
சேடனு மறிவரு சேடியை யறிபவ
செங்கோ செங்கிரை

திவிய தமிழ்வளர் நாவியல் புலவனே
செங்கோ செங்கீரை (7)

குமாருள் ஒருவனைக் கொடுகொடு வெனவரு
கோசிக முனிவர் முனே
கோமகன் உளமருள் நிலைமையை யறிதரு
குருமணி யருண் மொழியால்
தமரம துடன்வரு பெருமழை தருபுனல்
சலநிதி யடைவது போல்
தனயரை யளவறு கலைகளு மடைவுறு
தருணமி தென மொழியாத்
தமரெனு நினைவுறு தயரத னுயர் பொருள்
தனையறி பெரு நெறியைத்
தமிழறி புலவர்க ளனுபவ முதுமுறை
தந்தருள் பைங் குழவீ
அமரரு மடைவரு தமிழமுது அயில்பவ
ஆடுக செங் கீரை.
ஆரியம் ஓதிய சீரிய நாவல
ஆடுக செங்கீரை. (8)

அரியெனு மவனலன் அரனெனு மவனலன்
அயனெனு மவன் அலனே
அடுகுல னெனதென நினைவுறு வலியினை
யடைவுறு வர மடைவே
உரியன தவமுயல் திறமையு முளனலன்
உயர்வற உயரு மிவன்
உவமையில் மறைகளின் முதல்நடு இறுதியில்
உறுமொரு பொருளெனவே
கரியவ னொருபது சிரமுடை யவன்மொழி
கழறிய வண மெனவே

கவிஞர்த மனமிக மகிழ்வுறு பொருள்தரு
கம்ப னெனுங் குழவீ
அரியன வெளிதினி லமைதரு மொழிவல
ஆடுக செங்கீரை
ஆரியம் ஓதிய சீரிய நாவல
ஆடுக செங்கீரை (9)

இருவரு மவரவர் எதிருறு மவர்தம
திதய நுழைந்ததனல்
இரவியின் மருகனும் எழில்வளர் சனகியும்
இருமை யிழந்தனரே
ஒருவரி னொருவரும் ஒருநொடி பிரிவற
வுததி யெனும் படைமேல்
உயரிய துயில்கொளு மரிதிரு மகளெனும்
உரிமை மறந்திலரே
பிரிவறு மவர்பிரி வுணர்தலு மனமுறு
பிரியம் வளர்ந்திடவே
பிரிவற மறுவலு மியைவது புதிதிலை
பெரிய பழம் புணர்வே
அருமைமை யுணர்வது நெறியென மொழிபவ
ஆடுக செங்கீரை
ஆரியம் ஓதிய சீரிய நாவல
ஆடுக செங்கீரை (10)

கல்லா திருப்பா ரின்மையினல்
கற்றற் குரிய துறையெல்லாம்
கருத்து ளூறத் தெளிந்துணரக்
கற்ருர் தாமு மவணில்லை
சொல்லா ளளக்குங் கல்வியினில்
சுவையை யறியார் ஆங்கில்லை

தூய்மை விளங்கு கோசலத்தில்
சுரரும் பணிந்து போற்றும்வண்ணம்
எல்லா மனித இனத்தவரும்
எல்லாத் திருவும் பொருந்துதலால்
இல்லார் உடையார் எனப்பிரிந்த
இருமைத் திறத்தா ரவணில்லை
நல்லார் நிலமா மதுவென்ன
நவின்று யாடுக செங்கீரை
நான்மைத் திறமும் அறிகம்ப
நன்றே யாடுக செங்கீரை (11)

# 3. தாலப் பருவம்

வானின் றிழிந்து வரம்பிகந்த
மாபூ தத்தின் வைப்பெங்கும்
மறையின் சிரத்து ஞாயிறெடு
மதியின் கண்ணும் முழுஇடத்தும்
ஊனும் உயிரும் உணர்வும் போல்
உள்ளும் புறத்தும் உளன் என்ப
உவக்குஞ் சிறுதாய் சூழ்ச்சியினல்
உரிமை இழந்து கோல்துறந்து
காலும் கடலும் கடந்திமையோர்
கருத்து நிறைத்த கழல்வேந்தன்
காண்மின் அறிவின் வளம்படைத்த
கலிகாள் எனவே கட்டுரைத்தல்
போல்நுண் பொருள்கள் தமிழ்க்கருளும்
புலவா தாலோ தாலேலோ
பொன்னித் துறையின் புகழ்மலியும்
புலவா தாலோ தாலேலோ (1)

இராமற் கரசை இனிநல்கி
இடுக்கண் பிறவிப் பிணிகளைவான்
இயற்றற் கரிய தவநெறியை
எண்ண நின்றேன் எனும் இறைமுன்
இராமக் குழவி பெறும் பேற்றை
எவரே அடைந்தார் நின்முன்னேர்
இதுவே கருமம் தருமம் என
இசைத்தே வசிட்ட முனிமொழியால்
வராமல் புவியின் மடங்காமல்
வாழா வாழ்வு பெறஅருளும்

வள்ளற் பெருமான் புகழ்விளக்க
வருமோர் தமிழர் பெரும்பேறே
பொராமல் பொறியை வெலஅறிந்த
புலவா தாலோ தாலேலோ
பொன்னித் துறையின் புகழ்மலியும்
புலவா தாலோ தாலேலோ. (2)

மாலும்அன்ன கணத்தின் ஒரு
வரத முனிவன் மொழிக் கிணங்கி
வாளி யொன்று தொட்டதுவும்
வலிய பாவி முகம்பார்த்துக்
கோல வில்லைக் குனித்ததுவும்
குழுமி இருந்தார் கண்டிலரே
கூற்றின் உருவத் தவன்விடுத்த
கொடுமை திரண்டு பழுத்ததொரு
சூலம் அற்று விழுந்த இரு
துண்டம் எதிரக் கண்டனர்கள்
சொல்லுக் கடங்காத் திறல் வீரன்
தொடுக்கும் வாளி வலிமையிது
போதும் எனவே புகன் றருளும்
புலவா தாலோ தாலேலோ
பொன்னித் துறையின் புகழ் மலியும்
புலவா தாலோ தாலேலோ (3)

தொடுத்த கணையும் வில்லும் உறத்
தோன்றல் நின்ற நிலைதன்னைச்
சூழ நின்று விழியிமையார்
சுரர்போல் மனித்தர் நோக்கிநிற்ப
மடுத்த அழகும் நாணை நுதி
வைத்த செயலும் நோக்ககிலார்

மன்னன் சனகன் கவுசி கரும்
மயங்கா நிற்க மிதிலையினில்
எடுத்த செயலை எதிர் கண்டார்
இற்று விழுந்த ஒலிகேட்டார்
எதிரில் கடுப்பின் திறமிது என்
றெவரும் அறியா வகைபுகன்ற
தடுத்தல் அரிய தமிழ்க் களறும்
தலைவா தாலோ தாலேலோ
தமிழக் குடியின் தவப் பொலிவாம்
தலைவா தாலோ தாலேலோ (4)

சுரர்மா நதியைப் புவி யிடையே
தோன்றப் புரிந்த மரபுடையாய்
துயர நீங்கி யுவனுக உளம்
துளும்ப மின்னின் ஒதுங்கும் இவள்
அரமா திசையைச் செவியேற்கும்
அமரர் கோமாற் காயிரங் கண்
அளித்தோன் பன்னி அகலிகையே
ஆகும் எனவே கவுசிகராம்
வரமா முனிவர் திரு மொழியால்
வளரும் புகழ்பூண் வான்மீகர்
வழங்குங் கருத்தை உலகுகொள
வழிநூல் இயல்பின் அமைத்த பெருந்
தரமார் புலவர் சிகாமணியே
சதுரா தாலோ தாலேலோ
தமிழக் குடியின் தவப் பொலிவாம்
தலைவா தாலோ தாலேலோ. (5)

நேயம் நிறைந்த கவுதமனர்
நெருப்புச் சிந்த விளித்தனராய்
நிலையின் வழுவும் சதமகற்கு
நெடிய சரமே நிகர் மொழியால்

மேய சாபம் விதித்தருளி
மிகவும் வருந்தி ஒதுங்கி நின்ற
மென்மைக் குணங்கொள் அகலிகையை
விலைமா தனையை கருங்கல்லே
ஆய நிலையில் உழல்தியென
அளித்த சாபம் இராமபிரான்
அடியின் துகளால் ஒளியுங்கால்
ஐய நெஞ்சில் பிழைப்பில்லாத்
தாயை அருள்க எனப் புகலும்
தகவோய் தாலோ தாலேலோ
தமிழக் குடியின் தவப்பொலிவாம்
தலைவா தாலோ தாலேலோ (6)

மலர்மக ளுருவம் கொண்டு புகுந்திடும்
வஞ்சக வஞ்சியினை
மதிநுதல் நினதுற எவர்பதி யெதுஎன
வாய்மொழி பெறவினவா
மலரவன் மகன்மகன் மகளென இறையவன்
மனமகிழ் துணைவனது
வரிசைகொள் இளையவள் எனஅவள் புகல்மொழி
மதியின் அடைத்தளவே
நலநெறி உடையவள் அலள்என உணர்வுறு
ஞானியர் நாயகனும்
நரரொடு நிசிசரர் மணவினை துணிவது
நலமல என மொழியாத்
தலைமைகொள் உலகியல் நிறுவுதல் புனைபவ
தாலோ தாலேலோ
தண்டமிழ் ஓதிய கம்பக் கவிமணி
தாலோ தாலேலோ (7)

புகலது புகுகிலர் எனில்வரு நிசிசரர்
புறமுறும் அண்டமெலாம்
போதம் நிறைந்து மறைந்திட எண்ணிய
புந்தியின் வன்மையினல்
அகல்குவர் என்னினும் அங்கவர் யான்தொடும்
அம்பொடு வீழ்குவரால்
அரிய தவம்புரி முனிவர் கேண்மின்நீர்
ஆரியர் நும்முழையே
தகவில தாகிய துன்பம் எனைத்துள
தவிருதிர் அவையெனவே
தருமம் துணர்வுற பகலவன் வழிமுதல்
சாற்றிய மெய்ம் மொழியைச்
சகமுழு துணர்வுற அருளிய புலமைய
தாலோ தாலேலோ
தண்டமிழ் ஓதிய கம்பக் கவிமணி
தாலோ தாலேலோ (8)

ஆக்கினை யகிலமும் மணிவயி றிடமுற
அவைகள் அடக்கினையே
அருளொடு காத்தனை யான்புரி வேள்வியின்
அம்பொடும் வில்லினெடும்
பாக்கியம் எனதென உளமுற நினைதரு
பான்மையின் வந்தனையே
பழமறை தேடிய முழுமுதல் அரியன
பணிகளும் உள்ளனவே
தேக்கிய மகிழ்வுற இனியுள பெரியவை
சீரின் உஞற்றிடலாம்
தேவர்கள் அவிஉணும் மிதிலைமன் வேள்வியிற்
செல்லுதும் என் முறையே

தாக்கியல் கவுசிக முனிமொழி புகல்பவ
தாலோ தாலேலோ
தண்டமிழ் ஓதிய கம்பக் கவிமணி
தாலோ தாலேலோ (9)

உலப்பில்பல் ஆண்டுகள் உறுகணில் நீங்கவே
உலகம தாண்டுளனே
உத்தம புத்திரர் உற்றிலர் இன்னும்
உயர்தவ மாமுனியே
தலபபொறை தாங்குதல் தாம்வல மைந்தரைத்
தந்தருள் வேள்வியினைத்
தகுநெறி முயலுதும் எனமனம் உறமொழி
தயரத மன்னன்முனே
நலப்புகழ் வேள்வியின் வருபயன் என்னவே
ஞாலமி ரேழினையும்
நன்குற ஆள்வது திறமுள மைந்தரை
நரபதி பெறுதி எனச்
சலத்தினை வெலுமுனி புகன்மொழி தந்தவ
தாலோ தாலேலோ
தண்டமிழ் ஓதிய கம்பக் கவிமணி
தாலோ தாலேலோ (10)



## 4. சப்பாணிப் பருவம்

அலைகடலின் நடுவண்உறும் அரவுருவச் சயனமிசை
அரிய துயில் வளரு முகில்தாள்
அமரர் கணம்நிசி சரர்கள் புரிகொடுமை உரைசெய
அருளிநெடு செவியினடையா லும்
மலைவுபுரி மசவிரதம் அணையஅவர் வரமும்நெடு
மருள்வளரும் வாழ்வு மடைவே
வலிமை கெட அறிவு பெற மகன்மை கொடு
தயரதனின்
வருதுமென அருளு மொழியை
நிலைமைஉணர் பரிதிகுல குருமுனிவர் தெளிவுபெற
நிறை மொழியின் மொழிய அரசன்
நெடிய நலம் உறுவன்என அரிமுகமும் முயல்வனென
நிகழ் சரித மொழி புலமையோய்
தலைமைபெறு கவிஞர்களின் அரசுரிமை பெறுதகை
சப்பாணி கொட்டி அருளே
தண்டமிழின் அமுத மழை தந்தருளும் கம்பமுகில்
சப்பாணி கொட்டி அருளே. (1)

புண்ணியம் தொடர்கின்ற வேள்விவகை யாவும்
புரிந்து மகிழ் அண்ணல் நின்றன்
புதல்வன்இனி அரசுரிமை தாங்கவும் அருந்தவம்
பொருந்துவ துலக்கும் அடைவே
எண்ணி இனி யான்புகல்வ தியாதுனது தருமத்தின்
இயலுமொரு மூர்த்தி தானே
ஈண்டையோர் பேறென்ன அவதரித் துளஉண்மை
இனிதுணர்ந் துருகல் அல்லால்

அண்ணல்இவன் மண்ணின்மகள் மலர்மகளை
ஆள்கின்ற
வனமதி யென் புகல் வல்ஐயா
அவனிமன் னுயிர்களுக் குன்னுயிரின் இனியனாய்
அமைவன் எனவே வசிட்டர்
தண்ணருளி னல்மொழியும் மெய்விளக் கியபுலவ
சப்பாணி கொட்டி அருளே
தண்டமிழின் அமுதமழை தந்தருளும் கம்பமுகில்
சப்பாணி கொட்டிஅருளே (2)

கற்றவரும் மெய்யுணர்வு தருநூல்கள் முறையுறக்
கற்றிலா தவரும் இவளைக்
கண்டளவின் உளம்உருகி உண்ணுநீர் உயிரினுங்
கருத்து மிகவே மதிப்பார்
முற்றஉல கின்கண்வரு மனிதர் வானவர் தமது
முறைஅறங் காத்தளிக்கும்
மூர்த்தி யிவன்என உணர்தி லெனஅருளுமாமுனிவர்
மொழிகேட்ட மன்னனவனைப்
பெற்றபெரு நாளிலும் பின்னுகத் தெய்வம்
பிடித்த பெருவில்இறுத்த
பேறுபெறு நாளிலும் மழுவாளி தோல்வியைப்
பின்னின்று தெரிநாளிலும்
சற்றுவளர் உவகையிலன் ஆயினன் எனும் அறிஞ
சப்பாணி கொட்டி அருளே
தண்டமிழின் அமுதமழை தந்தருளும் கம்பமுகில்
சப்பாணி கொட்டி அருளே. (3)

உறுதற் கியைவ திராமற் கரசென
உருகுறும் எம்முளமே
உரிமைத் தலைமையை நீதுற வுறுதலின்
உழன்மெய்த் துயருறுமே

நிறுவித் தமதிசை உலகிடை ஒளிவிடு
நின்குலம் முன்னையவர்
நெறியைத் தவிர்வதும் நினதுழை நிகழ்வதும்
நேர்மைய தலஎனவே
நறுமெய்த் தமிழினில் உலகியல் நலமுணர்
நாவல மந்திரிமார்
நன்குபுகன்றனர் என்று மொழிந்தருள்
ஞான சிகாமணியே
குறிமெய்த் திருவுற அணிவது பயில்பவ
கொட்டுக சப்பாணி
குளிர்முத் தமிழ்வளர் குணமலி பாவல
கொட்டுக சப்பாணி (4)

மாதவ முனிவனை நெஞ்சுற வந்தனை
வள்ளல் புரிந்தபினர்
மன்னனை யாதரம் விஞ்ச வணங்கலும்
வாரி யெடுத்தவனே
காதலின் மைந்தனை மார்பொடு தழுவிய
காட்சியை உள்ளுருகக்
கண்டவர் பேற்றினை யுண்மையின் ஓதிய
கரிசறு மெய்ம் மொழியாய்
நீதியின் மேதினி யாள்வது தகுதிகொள்
நிலையினை நிலையிடவே
நேய முறுந்தன தோளிணை மார்பொடு
நேரின் அளந்தனனே
கோதறு நெறியிது எனமொழி நாவல
கொட்டுக சப்பாணி
குளிர்முத் தமிழ்வளர் குணமலி பாவல
கொட்டுக சப்பாணி (5)

சாலவு மலசினன் மூப்பும் அடைந்து
தவம்புகு நாட்டமுளேன்
தருதிகொள் மைந்தரில் வருபயன் இருமையும்
தந்தைய ரெய்துவதே
நீலமெய் யுடன்வரு தருமமெய் உருவுள
நின்னை அடைந்தனன்யான்
நெஞ்சு தளர்ந்துற விடுகிலை உரியது
நேர்மையினே புரிவாய்
மூலம தாகிய நல்வினை தூண்ட
முயன்ற தவப்பயனுல்
முறையுற வந்தனை நிற்பெறும் யானினி
முத்தியின் நெறிசெலவே
கோலுக வெனஅரை சுரைமொழி நாவல
கொட்டுக சப்பாணி
குளிர்முத் தமிழ்வளர் குணமலி பாவல
கொட்டுக சப்பாணி (6)

தாதையுரை கடவாத மைந்தரைப் பெற்றுளோர்
தக்க தவம் உற்ருேர் எனத்
தயரதன் சொல்லியே தாங்கரிய பொறையினைத்
தருவன்யான் எனவெணுது
தீதகல முடிபுனைக நல்லறச் செங்கோன்மை
சேர்கஇது வேண்டுவன் எனச்
செய்யதா மரைவென்ற கண்ணான் இம் மொழிகளாற்
சிந்தையின் உவந்துமிலனே
காதலுறு மன்னன்மொழி தீதென வெறுத்துமிலன்
கைதொழுது தலைவணங்கிக்
காவலன் தனதேவல் தாங்குவது கடனெனக்
கருதியப் பணியில் நின்ருன்

கோதில்நெறி இதுஎன்ற காரணக் கொடையாள
    கொட்டிஅருள் சப்பாணியே
கோவணங் கியபுகழ்கொள் நாஇணங்கியபுலவ
    கொட்டிஅருள் சப்பாணியே. (7)

ஊருணிகள் நிறைவுறவும் உதவுநிலை உள்ளபல
    உயர்மரங் கனிதாங்கவும்
உலகினர்க்குதவு மழை பொழியவுங் கழனியிடை
    ஓடு நதி புனல் பெருகவும்
யாருளர் மறுக்குமவர் இலமன்னர் வாய்மையால்
    இராமனர செய்து மகிழ்வை
இனிதினில் விளக்கிஅருள் மெய்க்கவிஞ சடகோபர்
    இசை விளக்கிய பாவல
பாரில்உள மன்னுயிர்க் கெனையவா றன்புசெறி
    பண்பினன் இராமன் அவையும்
பாலனம் புரியவரும் அனையவற் கனையராப்
    பரியும் அன்பின் என்னவே
கூறியநன் மதிநிறையும் மொழிகளாற் சொலும் அறிவ
    கொட்டிஅருள் சப்பாணியே
கோவணங்கிய புகழ்கொள் நாஇணங்கிய புலவ
    கொட்டி அருள் சப்பாணியே (8)

வரிசை பழுது படாவண்ணம்
    மயிலின் முறைகொள் குலத்துரிமை
வழுவ எனக்கும் நினக்கும் ஒலா
    வழியே சொற்ருய் கூனியெனும்
பெருமை பொருந்து கைகேயி
    பெறுதற்கரிய திருப்பெறுவான்
பிறிதாம் சிந்தை அடைந்த தனைப்
    பிறங்க அமைக்கும் திருக் குறிப்பால்

கரிய அரக்கர் மறத்தாலும்
கருதும் சுரர்கள் அறத்தாலும்
கருணை நிரம்பு தூ மொழிமான்
கருணை துறந்தாள் எனப்புகன்றாய்
அரசத் திருவையு மதியாதாய்
அறிவா கொட்டுக சப்பாணி
அமுதத் தமிழப் பெருங்குடியின்
அரசே கொட்டுக சப்பாணி (9)

களவற் றுயந்த மனமுடையார்
கடவுட் செல்வப் பேறுடையார்
கருதிப் புரிந்த தவத்தாலும்
கருணைத் தேவன் வரத்தாலும்
பளகற் றுயர்ந்த கைகேயி
பரிவு தவிர்ந்த வரங்கேட்கும்
பரிசு பெற்ற இரக்கமிலாப்
பண்பா னன்றோ வுலகமெலாம்
கொளவற்றெனலாய்ப் பரவியது
குணவா ரிதியாம் இராமபிரான்
குறைவில் புகழாம் அமுதமெனக்
குறிக்கும் வாய்மைப் பெருமானே
அளவற் றகலுந் தமிழ்க் கடலின்
அமுதே கொட்டுக சப்பாணி
அமுதத் தமிழப் பெருங் குடியின்
அரசே கொட்டுக சப்பாணி (10)

## 5. முத்தப் பருவம்

பூதலத் தரசுகளை அளவறு சினத்தினல்
பொன்று வித்தனை எனினும்நீ
புண்ணியச் செல்வ நிறையமதங்கி யென்றுலகு
புகழ நன்னெறியில் வாழ்ந்த
வேதவித் தாயஒரு மேலவன் மைந்தனை
விரதமும் பூண்டுள்ளனை
மிக்கதவம்முயலும் உயர் சான்றவர் இனத்தொடு
விரும்பிப் பயின்றுள்ளனை
ஆதலிற் கொல்லுதல்த காதுன்னை யெய்துள்ள
அம்பிது பிழைப்பதன்ருல்
ஐயவிப் பொழுதிதற் கேற்றதொ ரிலக்கமென
ஆகுவதி யாதென்னமே
காதலிற் கரியமுகில் அருளுமொழி சொற்றசிறு
கனிவாயின் முத்தம் அருளே
கும்ப நாடுடைய ஒரு செந்தமிழ்த்திருவாள.
கனிவாயின் முத்தம் அருளே. (1)

நீதியுணர் அண்ணலே குற்றம்என் மேலதே
நீமுனிந்தருளல் கண்டாய்
நிலத்தவரும் விண்ணுலகில் வாழுமவர் யாவரும்
நேயமொடு போற்றுகின்ற
ஆதியென நின்னையான் நன்கறிந் துள்ளனன்
அலங்கல் பொலி நேமியுடையாய்
அரைமதிய மணி சடையன் ஏந்துவில் பெருமநின்
ஆற்றலுக் கேற்றதாமோ
யாதுமினி உலகிற் கிடுக்கணோ இல்லைநீ
ஈங்கு வந்துளை ஆதலால்

யான்தந்த நின்தனுவு நின்னுடை உரத்திற்கு
　　இடன்மை யறிவல் என்றே
காதுசின முடையாம தங்கிமொழி தருபுலவ
　　கனிவாயின் முத்தம் அருளே
கம்ப நாடுடைய ஒரு செந்தமிழ்த் திருவாள
　　கனிவாயின் முத்தம் அருளே. (2)

விளைகின்ற தனதுபுகழ் வல்லியினை வலிமையால்
　　வேரறுத்தனள் என்னவே
மேகலைகள் சிந்தினள் கிண்கிணி துறந்தனள்
　　வெண்மதியில் உள்ளமறுவை
அளைகின்ற கைகொடு துடைப்பவளை ஒப்பவே
　　அணிநுதலில் உள்ள திலகம்
அழித்தனள் மணிக்கலன் அனைத்தையும் சிதறினள்
　　அலர்விழிகள் நீர் சொரியவே
உளைகின்ற நல்லி வீழ்ந்தென்ன, நாடகமயில்
　　உறங்கிக் கிடந்த தொப்ப
உயர்சனகி யென்னுமொரு கமலமகள் நீங்கலால்
　　உட்புகுந் தவ்வை யெனவே
களைகின்ற கோலத்தன் கைகேயி நிலைசொற்ற
　　கனிவாயின் முத்தம் அருளே
கம்பநா டுடைய ஒரு செந்தமிழ்த் திருவாள்
　　கனிவாயின் முத்தம் அருளே (3)

கராமுன் மலையத் தளர்ந் தொடுங்கு
　　கரியெய்த் தந்நாள் அரவணையில்
கண்கள் வளரும் பெரு மானே
　　காவா யெனவே கதறுதலும்
விராவி அளிக்கு மெய்ப் பொருட்கும்
　　வேதம் அறியாத் தனிமுதற்கும்

மெய்ம்மைத் தவத்து வசிட்ட முனி
விண்ணும் மண்ணும் மகிழ்பூப்ப
இராமன் எனவே திருப் பெயரை
இசைத்தான் என்னும் பொருள்விளக்க
எழுந்த தமிழக் குளக்கன்றே
இசையின் மகளைப் பணி பூண்ட
முராரி தொழும்ப திருவழுந்தூர்
முதல்வா முத்தம் தருகவே
மும்மைத் தமிழின் சுவையறியும்
முதல்வா முத்தம் தருகவே. (4)

கரனை மறந்தான் தனக் கிளையாள்
கரிய மூக்கைக் கடிந்து நின்றான்
கழியா உரனை மறந் தொழிந்தான்
கடியும் பழியை அறமறந்தான்
அரனை வென்றி கொளுங் காமன்
அம்பின் வலியால் அடைவரங்கள்
அடைய மறந்தான் சொலக் கேட்ட
அரிவை தன்னை மறந்திலனே
சிரனை அழுத்து கயிலை யினில்
சிவனும் உமையும் செவிகுளிரச்
சிறந்த இசையால் மறை முழங்கும்
திறலோன் அரக்கன் எனப்புகன்றாய்
முரனை யழித்தேற் கடிமைபுரி
முதல்வா முத்தம் தருகவே
மும்மைத் தமிழின் சுவை யறியும்
முதல்வா முத்தம் தருகவே. (5)

பாகத் தொருவன் அடக்கி வைத்தான்
பதுமத் திருந்த பெண்ண ணங்கை

பசுமை யிடையில் மறைந் தொடுங்கும்
பழைய செம்மை எனும் வண்ணம்
ஆகத் தொருவன் உரிமையினல்
அமைத்து வைத்தான் அந்தணனே
அன்புக் குரிய பெண்ணணங்கை
அமர்த்தி நாவில் வைத்தனனே
மேகத்திருக்கும் மின் கொடியை
வெல்லும் இடையாள் சானகியை
விருப்பாற் பெற்ருல் எங்ஙனமோ
மேவ வைத்து வாழ்தி யென
மோகத் தயரும் இராவணன் முன்
மொழிவாய் முத்தம் தருகவே
மும்மைத் தமிழின் சுவை யறியும்
முதல்வா முத்தம் தருகவே. (6)

மையில் நிறைந்த வாட்கண்ணும்
மயிலே நிகர்க்கும் சாயலுமாய்
வந்தே என்முன் நிற்குமின்ன
மாதோ நீசொல் சிதையென
மெய்யை அறியாத் தசமுகனர்
விரும்பி இளையாள் தனைக்கேட்ப
விரிந்த செந்தா மரைக் கண்ணும்
வியன்செங் கனியை நிகர்வாயும்
ஐய சந்தார் திருத்தோளும்
அழகே எனத்தாள் தடக்கைகளும்
அந்தார் அகலத் தமைவு முறும்
அஞ்ச னத்தின் குன்றமென
வையம் அளந்தான் உருவிளக்கும்
மணிவாய் முத்தம் தருகவே
வளவர் நாட்டுப் புலவர் சிகா
மணியே முத்தம் தருகவே. (7)

யான் கண்டதுவோர் பெண்ணுருவம்
எங்கை நீயோர் ஆணுருவம்
இயம்பா நின்றாய் நரரும் நம்மை
யிங்ஙன் மாயை மயக்குவரோ
மான்கண் டனைய விழியினளை
மறந்தாய் கொல்லோ எனும் அவன்முன்
மயல் பூண் நினைக்கப் பெண்ணுருவே
வந்தெங் கெங்குந் தோன்றுவது
தான்கண் டுணர்தி எனக்கென்நாள்
தணியா வின்னல் இதுதந்தான்
தளர்ந்தே அந்நாள் முதலாகத்
தனியேன் அவளைக் காண்கின்றேன்
வான்கண்டனையான் எனுமவள்சொல்
வகுத்தாய் முத்தம் தருகவே
வளவர் நாட்டுப் புலவர் சிகா
மணியே முத்தம் தருகவே. (8)

எயிலை உடுத்த இலங்கையினை
இனிதின் ஆண்ட இராவணன்தான்
இளையாள் புகன்ற சீதையினை
இதயச் சிறையில் முனம்வைத்தான்
குயிலை வென்ற மொழியிணைப்பின்
கொணர்ந்து வனத்துச் சிறையிட்டான்
கொடியான் அரக்கன் எனுங் குறிப்பைக்
குறைவில் மந்தோதரி மொழியால்
உயிரை அரக்கன் இழக்குங்கால்
ஒருவன் வாளி உட்புகுந்தே
உள்ளச் சிறையில் அவள் நுழைந்த
ஒவ்வாக் காதலொழித்ததெனச்

செயலை விளக்கும் நினைவுடைய
செல்வா முத்தம் தருகவே
செழிக்கும் பொன்னித் திருவழுந்தூர்த்
தேவா முத்தம் தருகவே. (9)

வாயின் இதழும் நாசியொடு
வளருந் தனமும் அவர் கொய்ய
மடந்தாய் நின்பாற் குறை என்னை
வழங்கா யென்னும் இராவணன்முன்
ஏய வுரைக்கும் சூர்ப்பணகை
எவர்க்கும் எழுத வொண்ணாத
இராமன் என்னும் இளைஞனெடும்
இயைபுற் றிருக்கும் எழிலுடையாள்
வேயின் இடத்துத் தோள் கொண்டாள்
மின்னில் மருங்குல் தனைப் பெற்றாள்
விமலப் பொன்னின் மேனியினாள்
விளைத்த தெனவே விடையிறுக்கும்
தீய மொழிகள் நயம்படுத்தும்
திருவாய் முத்தம் தருகவே
செழிக்கும் பொன்னித் திருவழுந்தூர்த்
தேவா முத்தம் தருகவே. (10)

## 6. வாரானைப் பருவம்

கண்ணே வேண்டு மெனில் ஈயக்
கடவேன் உள்நேர் ஆவியினைக்
கருதி வேண்டில் நின தன்றோ
கரிய விடமே நிகர் விழிகொள்
பெண்ணே வண்மைக் கேகயர் கோன்
பெறுமோர் மானே பெறுவாயேல்
பெரிய மண்ணே கொள்வாய் நீ
பிறிதொன் றுளதை மறந்தொழிவாய்
எண்ணேன் வாய்மை தந்தொழிந்தேன்
இனியான் அதனை மாற்றகிலேன்
இருளும் பேயும் இரந்தக்கால்
இரங்கும் நீயே இரங்காயோ
உண்ணுய் உயிரை எனும் அரசன்
உரைசொல் பெரியோய் வருகவே
உயர் வொப்பில்லாக் கம்ப நல்நா
டுடையாய் வருக வருகவே. (1)

நின்மகன் ஆள்வான் நிலமெல்லாம்
நீயும் இருந்தே இனிதாள்வாய்
நிகழ்த்தும் வாய்மை உரை குன்றேன்
நின்னை வேண்டி இரக்கின்றேன்
என்மகன் என் கண் என்னுயிரே
எல்லா உயிர்க்கும் நன்மகனே
இளமைச் செல்வன் கோசலநா
டிறவா திருக்கும் வரநல்காய்
புன்மைகள் எண்ணேன் மெய்யேயென்
புகழை அழிக்கும்நிலை கண்டேன்

புதல்வன் கானம் புகுவானேல்
　　பொன்றல் தவிரேன் இன்றளவும்
உன்மகன் அன்றே எனும் வாய்மை
　　உரைப்பாய் வருக வருகவே
உயர்வொப் பில்லாக் கம்பநல்நா
　　டுடையாய் வருக வருகவே. (2)

இரந்தான் அரசன் மொழி நின்ற
　　இன்னுரை கொள்ளான் மூணிவெஞ்சான்
எழுந்தே வளரு மரம் போலும்
　　இரக்கம் அறியா நெஞ்சகத்தாள்
வரந்தா என்றேன் வாய்மையினல்
　　வழங்கும் வரத்தைத் தவிர்கென்றல்
மன்னு மரபுக் கழகாமோ
　　மடியா அறத்தின் திறமாமோ
கரந்தான் என்றே பழிபூணும்
　　கருத்தே கொண்டாய் எனினும்யான்
கடிதில் பெறுந்தீ வசை பாரேன்
　　கழறும் வரமே பெறுவானென்று
உரந்தா னுடைய அரசி உரை
　　உரைப்பாய் வருக வருகவே
உயர் வொப்பில்லாக் கம்பநல்நா
　　டுடையாய் வருக வருகவே. (3)

பொன்னிளமை மேனியொடு மணியினமை கால் செவிகள்
　　பொற்புற அமைந்து வருமான்
பூஞ்செடிகள் இடைநின்று துள்ளிவிளையாடிஅயல்
　　புல்மேய்ந்த காட்சி கண்டு
தன்னிளமை இயல்பினல் அதுதருக எற்கென்று
　　சானகி உரைத்து நிற்கத்

தகுவர்குண நன்குணரும் இளையபெருமாள்அது
    தகாதென்று சொல்லும் அளவிற்
பன்னரிய கோடிவகை மன்னுயிர் பரந்தநிலை
    பார்த்தறி தல்வல்லா நிலை
பசும் பொன்ஒளி யன்னங்க ளோர்ஏழு முன்னுட்
    பிறந்த கதை கேட்டு மிலையோ
தன்னிலைமை ஆய்க எனும் வள்ளல் மொழி
    சொற்றனுழும்
    தண்ணமுத கவி வருகவே
தாசரதி படிவமுறு தேசுபெறும் உளமுடைய
    சாசுவத கவி வருகவே. (4)

தயிர்கடையும் மத்தென்ன உலகெலாம் நலிகின்ற
    சம்பரற் சாய்த்த நாளில்
தக்கவுடல் நியென்றும் ஆவியான் என்னவும்
    சாற்றுமுரை உண்மை யன்றோ
செயிர்புகுதல் இல்லாத நெஞ்சில்நோய் நின்னுரை
    திறம்புவதும் என்னை கொல்லோ
செங்கதிரின் வழிவந்த தயரதப் பெயர்கொளும்
    செய்யகோன் மெய்யின் அரசே
உயிர்தவிர நீள்நிலத் துடலைவிண் ஏற்றினர்
    உணர்விலாக் கூற்றினர்தாம்
உளுற்றும் வினைதக்கதோ நெறிஉணரும் அமரரே
    உரைமின் நீர்என்றெ ருவைதான்
சயிலமது பெருகருவிபோல உருகிய செய்தி
    சாற்றி அருள்கவி வருகவே
தாசரதி படிவமுறு தேசுபெறும் உளமுடைய
    சாசுவத கவி வருகவே. (5)

அரியதவம் முயல்கின்ற நன்னெறி சிதைத்தலால்
    அஞ்சினம் அரக்கர் தம்மை

ஆண்டருள்க எம்மைஎன முனிவர்கணம் வேண்டவே
அவர்தமக் கன்பராகிக்
கரியவொளி செய்ய எழில்மேவும் இருமாரராக்
காசினியில் வந்த அவரைக்
கணைதொடும் தனுவலார் யாவரும் நிகர்க்கலார்
கடவுளருள் மிக்க மூவர்
தெரியவரும் இவ்விருவர் நிகரென்ன ஓதினுஞ்
செம்மையிலை ஒவ்வொருவரே
தேவரம் மூவரையும் ஒப்புறுவ ரென்றுறுதி
செப்பும்ஒரு சூர்ப்பணகை சொல்
தருபுலவ காரணக் கொடையாளன் மரபின்வரு
தண்ண முதகவி வருகவே
தாசரதி படிவமுறு தேசுபெறும் உளமுடைய
சாசுவத கவி வருகவே. (6)

கரணைத் தொடரும் காளையர்கள்
கமலச் செங்கண் இராமனெனும்
கரிய செம்மல் வில்லொன்றால்
கடிகை மூன்றில் அழிந்தசெயல்
உரணைப் பொருந்து தசமுகன்முன்
உரிமைத் தங்கை புகன்றவணம்
உயருஞ் சுவையிற் புனைபுலவ
உறந்தை புரக்கும் புகழ்ச்சோழர்
வரணைப் புகழை அழியாத
வாழ்வைப் பெறுவான் தமிழ்மொழியில்
வள்ளல் சடையன் பெயர்விளங்க
வகுளா பரணன் செயன்மிரப்
பிரமச் சுருதி எனப்பொழியும்
பெருமான் வருக வருகவே
பிறங்குங் கம்ப நாடுடைய
பெருமான் வருக வருகவே. (7)

மஞ்சை நிகர்க்கும் ஓதியினள்
மழையை வென்ற கருங்குழலாள்
வளர்பஞ் சொக்குங் கழல்இணையாள்
வருசெம் பவள நிகர்விரலாள்
அஞ்சொல் அமுதக் கடலிடையே
அள்ளிக் கொண்ட சுவையுடையாள்
அவள்கண் கஞ்ச வதனத்தே
ஆழ்ந்த கடலிற் பெரியஎன
வஞ்ச வஞ்சி சூர்ப்பணகை
வாயால் விளம்பி யிராவணனுர்
மனமும் நினைவும் அறிவுமெலாம்
மயங்கப் புரியு மொழிவலவ
பிஞ்சம் அமுதாம் தமிழ்மயிலின்
பேறே வருக வருகவே.
பிறங்குங் கம்ப நாடுடைய
பெருமான் வருக வருகவே. (8)

தோளின் எழிலைச் சொல்லுவனே
சுடரும் முகமீ துலவிவரும்
தொழில்பூண் வாளை விளம்புவனே
சுமக்கும் வல்லைப் புகழுவனே
மீள நினைந்து திகைப்பதல்லால்
விளம்பும் ஆற்றல் படைத்துளனே
விபுதர் பெறுப்பேர் அமுதாகி
விளங்கா நின்ற திருமகளை
நாளை அரசே நீகாண்டி'
நன்றே தெளிதி நானுரைக்கின்
நலமும் குணமும் திருவுருவும்
நயமும் வருமோ எனுங்கொடியாள்
கோளை விளக்கும் புலவதமிழ்க்
குலத்தின் தவமே வருகவே

குருகூர்ப் பெருமா னடிபரவும்
 குளிர்நா வுடையாய் வருகவே. (9)

தலையின் மீது மகுடம் எனத்
 தாங்கி உன்னை அரம்பையர்கள்
தனியே வணங்கி ஏவல் செயத்
 தகைசால் நிலைமைதனில் வைப்பேன்
அலையல் எனவே கரம் குவிக்கும்
 அரக்கன் மொழிக்குச் செவிபொத்தி
அழகின் கடலாம் காகுத்தற்
 கமைந்த வுரிமைக் கற்பேனைப்
புதுநாய் அவியை வேட்டதெனப்
 புகன்ருய் இதுநீ புவியினிடைப்
பொன்றும் உயிர்க்கா இற்பிறப்பைப்
 போக்கத் துணிவார் உளரேயோ
குலைதி பாவி எனுஞ் சனகி
 குணஞ்சொல் வாயான் வருகவே
குருகூர்ப் பெருமா னடிபரவும்
 குளிர்நா வுடையாய் வருகவே. (10)

# 7 அம்புலிப் பருவம்.

பொருவரிய அமுதொழுகு கலைகளால் விண்ணில்
புலவருக் கின்பம் அருள்வாய் [உறை
பொழியும் வெண்ணிலவைநீ யுள்ளினுக் குணவெனப்
புரிவினெடு நல்கு கின்ருய்
பொருவிறந் துயர்தமிழின் அமுதமய கலைகளால்
புலவருக் கின்பம் ஊட்டி
புகழெனனு நிலவினுல் உயிரினப் புள்ளெலாம்
பூரிக்க வாழ்பவன் இவன்
கருமுகிலில் இடைவந்து விண்ணவத் தொளிர்கின்ற
காட்சியுனை நீயும் இவனே
கரியமுகில் உளம்வந்து காட்சிதர மண்ணில்வளர்
கவினுடைய குழவியாவன்
அரிளுருவன் இவன் இன்னை ஆர்வமோ டழைத்த
அம்புலீ ஆட வாவே [லால்
அன்புசால் இதயமுள கம்பநா டுடையனெடு
அம்புலீ யாடவா வே (1)

செடிகொடிகள் ஆதியாம் பயிரின் வகையுலகிற்
செழிக்கவே உதவி புரிவாய்
திரைகளொடு கடல் பொங்கி ஆனந்தம் எய்தவே
செய்வல்ல புகழாளன் நீ
நெடிய நாள் கண்ட தமிழ் எனுமோர் பெரும்பயிர்
நிலைக்கவே யேர் பிடித்து
நிறைவு பெறு தமிழர் குடிவாரி மகிழ்வெய்தவரு
நேயமே உள்ளான் இவன்
படியினிடை உளர்காண விண்ணளப்பா யிவண்
பரவின் அளந்து நிற்பான்

பலபிறப் புடையைநீ ஒருபிறப் பினனிவன்
பரமனை யடைந்த பெருமை
அடிமையிலும் நிகருடையை யாதலால் இவனேடும்
அம்புலீ ஆடவாவே
அன்புசால் இதயமுள கம்பநா டுடையனெடும்
அம்புலீ ஆடவாவே. (2)

கலைகள் பதினறினல் பெருமிதங் கொண்டுநீ
காயமெங்கும் திரிபவன்
கருதுமறு பானன்கு கலைகளால் வீறிஉயர்
ககன வெளி திருவன் இவனே
நிலைகள் தடுமாறுவதும் வளர்வதும் தேய்வதும்
நினக்குண் டிவன் தனக்கோ
நிலையாய நிலை உண்டு தேய்வின்றி வளரும் ஒரு
நித்தியச் செல்வம் உண்டு
மலைகள்தொடு முகில் களால் நினதொளி
மறுவினல் அயர்தலும் உளாய் [மழுங்குவதும்
மலைவில்தொடும் முகிலினல் வளர்ஒளியன்
மறுவிலா வள்ளல் இவனே [உளமலரில்
அலைதல்அற விளையாடி மகிழும்நினை வுள்ளதேல்
அம்புலீ ஆட வாவே
அன்புசால் இதயம்உள கம்பநா டுடையனெடும்
அம்புலீ ஆட வாவே. (3)

திருமகளை உரமுடைய திருமாலின் இதயம்வரு
செயலுனக் குள்ள தென்னில்
திருமகளும் அரியும்வரும் இதயமுளன் எனும்ஒரு
செருக்கிவற் குண்டு கண்டாய்
அரியமுனி வுத்திரியின் விழியின்எழு பெருமையால்
அறிகன்றி என்ன நினையின்

அமுதமுனி மாறன்உரு விழியினும்உளத் தும்உறும்
அறிவன்இவன் என்றுணருவாய்
திரைகெழு பயோததியின் மதனம்உற எழுகின்ற
சீர்மையுளை என்னும் நினைவேல்
திருநிறை தமிழ்க்கடல் கடைந்து வரும் அமுதாய
செல்வனிவன் என்பதுணர்வாய்
வருபெருமை எய்தநினைவுளதெனில் அழைக்குமுனம்
வருக அம்புலி வருகவே
வஞ்சம்அறு நெஞ்சம்உள கம்பனொடு விளையாட
வருக அம்புலி வருகவே. (4)

இந்திரர்க் காரமுதம் நல்கலால் உடல்தேயும்
இயல்புனக் குண்டு கண்டாய்
இனியதமிழ் ஆரமுதம் நல்கியும் தேய்கிலா
ஏற்றம்உளன் இவன் உணருவாய்
தந்திரக் கடலினொடு தானவர் எதிர்த்திடில்
தாங்குதிற மிலை நினக்கே
தந்திரக் கடல்பலவும் நாவினால் துழவியே
தான்கடந் தேறுவன் இவன்
சுந்தரப் படிவம்உறு செங்கதிரின் உதவியால்
தோன்றும் ஒளிஉருவம் உடையாய்
சுந்தரப் பெயர்உரிமை பூணுமவன் உளமுறத்
தோன்றும் ஒளிஉடையன் இவனே
மந்திரத் திருமறையை அறியும்இவன் அருகிலே
வருக அம்புலி வருகவே
வஞ்சம்அறு நெஞ்சம்உள் கம்பனொடு விளையாட
வருக அம்புலி வருகவே. (5)

தண்தமிழ் மருந்தினால் மெய்யில்உறு பிணியெலாம்
தக்க நெறி போக்க வல்ல

தன்வந்த்ரி இவனென்ப துண்மை யென்றறிதியே
 தண்நிலவு பொழியும் மதியே
அண்டருக் கமைமருத் துவரென்ன உலகுசொலும்
 அவராலும் நீங்கிலாதே
அருள் தவிர்ந்தொருவன் இடுசாபத்தின் நிலைய
 தவலத்தின் ஆழ்த்து கயநோய் [டைக்
கண்டளவில் விழியினுல் கருணையொடு தீர்த்துணைக்
 காத்தருள வல்லவன் இவன்
கம்பத்தில் நின்றஒரு சிங்கத்தை யும்சிரக்
 கம்பமே செய்ய வைத்தான்
வண்டர்படி மகிழ்மாறர் தொண்டனெடு விளையாட
 வருக அம்புலி வருகவே
வஞ்சமறு நெஞ்சம்உள கம்பனெடு விளையாட
 வருக அம்புலி வருகவே. (6)

நறுமுத் தமிழில் சுவைசெறி பாடலே
 நாளும் அறிந்திடலாம்
நவிலற் கருமெய்ப் பொருள்தரு மேதரு
 நான்மறை ஓதிடலாம்
பெறுதற் கரியன நல்வினை செய்து
 பிறப்பும் ஒழித்திடலாம்
பிறையில் சிறுகுறு பீழை யொழிந்துயர்
 பெருமையும் எய்திடலாம்
அறமுற் றறியப் பெறுகுவை யாமெனில்
 அவனித் தலமிடையே
அடையப் புரிவொடு முயலுதி தமிழரை
 அடிமை கொள்பவன் அருளால்
மறுவில் தவிரத் தவமுடை யாய்எனின்
 வா அம்புலி வாவே
வளமுத் தமிழப் புலவனெ டாடுக
 வா அம்புலி வாவே (7)

ஆழ்மைக் கடலிடை ஒளியற விழுவதும்
அயலுறு பரிதியினை
அடைவின் இறந்தனை ஒளிபெறு சிறுமையும்
ஆய்ந்து தெளிந்தனையேல்
வீழ்வைத் தருவினை தவிர்வுற இயல்பினில்
மெய்யொளி பெறுவிணையை
விழைவொடு நாடுதல் வேண்டுவ தெனஎவர்
விண்டு விளம்பிடுவார்
காழ்வைத் துளகடு வினைகளை வேரொடு
களைவது வல்ல கழல்
கருதிய நெஞ்சினன் அருள்செயில் நீபெறு
கதியை நினைந்திடுதி
வாழ்வில் கிளருதி தாழ்வைத் தவிருதி
வாஅம் புலி வாவே
வளமுத் தமிழ்ப் புலவனெ டாடுக
வாஅம் புலி வாவே. (8)

பழகற் குரிய குண நலன்கள்
பயிலப் பயில அறிகிற்பாய்
பாவ வினையின் மிகக் கொடியை
பசிய கிளியின் மொழிமிழற்றும்
அழகிற் சிறந்த தாரையினை
அமர குருவின் பள்ளியினை
அறத்தைத் துறந்து நெருங் கினையே
அகில உலகிற் பழிபடுவாய்
விழவிற் பொலியுந் திருவழுந்தூர்
விபுதன் இவன்முன் வருவாயேல்
விளம்பும் இராம மந்திரத்தால்
வினைகள் கழல நலம் பெறுவாய்

அழகற் கன்பன் அழைக்கின்ருன்
ஆட வருவாய் அம்புலியே
அமுத கவியாம் கம்பனெடும்
ஆட வருவாய் அம்புலியே. (9)

நெறியில் நடந்து விசும்பி னிடை
நிலவைப்பொழிந்து பலர்க்குதவும்
நினைவும் அழியா நெடுவாழ்வில்
நிலைக்கும் கருத்து நினக்குளதேல்
குறியின் மடங்காப் பரம் பொருளைக்
குணத்தால் செயலால் அகத்துணர்ந்து
குறையா வாழ்வு கொடுப்பதற்கும்
குலவும் சிறப்பைக் கெடுப்பதற்கும்
பொறியுன் செயலை மாற்றுதற்கும்
புலமை படைத்தான் சினவாமுன்
பொருக்கென் றெழுந்து புறப்பட்டே
புவியில் வரவே மனங்கொள்வாய்
அறிவின் செல்வன் அழைக்கின்ருன்
ஆட வருவாய் அம்புலியே
அமுத கவியாம் கம்பனெடும்
ஆட வருவாய் அம்புலியே (10)



## 8. சிற்றிற் பருவம்

தும்பிக் குழாத்தில் சுற்றிவரு
சுற்ற முடையான் வில்வலவன்
துயரால் அழியும் மனத்தன்பன்
சொரியும் கண்ணீர் அருவியினன்
அம்பித் தலைவன் குகப் பெருமான்
அவனிக் கிழத்தி தவநோற்றும்
அரசர் நின்னை அடைந்திலரே
ஐய விஃதோர் கொடுமையென
வெம்பித் தொழவே அமுதமொழி
விளம்பும் கரிய திருஉருவின்
வேதப் பெருமான் புகழ் புனையும்
விஞ்சைப் பெருமான் அலையருகே
செம்பிற் சிவக்கும் மணல் தொகுக்குஞ்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திருஅழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே.

பொய்யிற் பொருந்து முறை யில்லேம்
புகுந்த புகலும் வனமேயால்
புரிகுற் றேவல் செயவல் லேம்
புகுவாய் எம்மூர் எம்மரசே
கையில் பிடித்த தனுவுடையேம்
கானும் உளதே விளையாடக்
கங்கை உளதே புனலாட
கண்ணு தினை தேன் உணவுளதே
உய்யப் பெருவேம் எங்குடியில்
உவப்போ டொருநாள் வைகுதி யென்

றுரைக்கும் குகனுக் குள்ளுருகும்
உயர்வு கொடுத்த கவிவலவா
செய்யத் துணிவேம் தரளத்தால்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திருஅழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே (2)

உள்ளம் உருகி உரைக்கின்றுன்
உவமை யில்லாப் பண்புடையான்
உவக்கும் முறையால் விடைதருதல்
உரிதே யென்னக் காகுத்தன்
கொள்ளஅரிய பொருள் கொடுக்கும்
குணஞ்சால் புனிதக் குழுவி னிடைக்
குறிப்பின் விளங்கும் பொருள் தெளிந்து
குறுக மீள்வன் சில நாளில்
கள்ளம் அறியாய் உண்மை யெனக்
கருணைப் பெருக்கால் உரைத்த மொழி
கவியில் கவின அமைத்தருளும்
கம்பக் களிற்றும் போதகமே
தெள்ளும் மணலால் அமைக்கின்ற
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திரு அழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. (3)

நெறிகள் அமைக்கும் நெறி வல்லேன்
நெடிய காலில் நடந்தடியேன்
நேடி இனிய கனி காய்கள்
நேயம் உறவே தரவல்லேன்
உறையும் இடமும் அமைவிப்பேன்
உம்மை நொடியும் பிரியகிலேன்

உடலும் பகைவர் விலங்குகளால்
உறுகண் உளவேல் உயிர் கொடுப்பேன்
பெறுதல் உரிய பேறு பெறப்
பெருமான் அருள்க எனுங் குகனைப்
பேணத் தகுந்த தொண்டர் குழு
பிறங்க அமைக்கும் பெரும்புலவ
தெறுதல் வேண்டா அன்பினாற்
சிறியேன் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திரு அழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே (4)

அன்ன தொளும்பன் உரை கேளா
அமல வள்ளல் காகுத்தன்
ஐய நால்வர் முனம் இருந்தேம்
அன்பால் ஐவர் உளரானோம்
என்ன துயிரை அனையாய் நீ
இளவல் இவனே உனக் கிளையான்
இவளுன் கொழுந்தி யானுரிமை
இளையுந் துன்பம் வரில் அன்றோ
மன்னு மின்ப மடை கின்றோம்
வாழும் நாட்கள் பலவுளவே
வருநாள் இணங்கி வாழ்வம் என
வழங்கும் மொழிகள் தருபுலவ
தென்னர் பணியும் திருவடியாற்
சிறியேன் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திரு அழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. (5)

அங்கு நிறைந்த கிளைகாவற்
கமைதி பொருந்தி உளன் உம்பி

அரிய வனத்தில் துணைபுரியும்
அதற்கும் உம்பி இருக்கின்றான்
இங்கு வளர்ந்த கிளைகாவற்
கென்னைத் தொடர்ந்து நீ வரினே
யாரே உளர் காண் உரை செய்யாய்
இனியோய் இவரே என்கிளைஞர்
பொங்கு துயரின் அழுந்தாமே
புரப்பாய் இதுவென் ஏவலெனப்
புகலும் பெருமான் கருணைமழை
பொழியும்கம்ப மழைமுகிலே
தெங்கு மலிந்த நிலத்தினிலே
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திரு அழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. (6)

மேவ அரிய கானகத்தின்
மிதிலை மன்னன் தவப்பேற்றின்
மென்மை பொருந்து மலர்ப்பதங்கள்
மெல்ல நடந்து வந்தனவே
தாவில் குணங்கள் தவம்புரிந்து
தனையே அடையப் பிறந்த என்றன்
தம்பி கரங்கள் இலை குழையால்
சாது சமைக்கும் திறம் பெற்ற
யாவை யாதும் இலாதவர் கட்
கியையா என்ன இராமபிரான்
இமையோர் பெறுத இன்னமுதின்
இசைத்த மொழியை அருள்புலவ
தேவர் வணங்கு நின் கழலால்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திருஅழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே. (7)

கழுகின் வேந்து தனக்கமையும்
 கடனை இயற்றி உயிர் கொடுக்கும்
காட்சி கண்டு மனம் உருகிக்
 கண்ணீர் பொழியும் விழியினனாய்
அழுத பெண்ணைத் தனிமையினால்
 அரக்கன் கவர்ந்து செல்லுகையில்
அவனைத் தடாது கண்டிருந்த
 அமரர் உலகும் திசையுமெலாம்
பழுது படவே கணை தொடுத்துப்
 பவனன் துணைக்குக் கொடுப்பனெனும்
பரமற் கமைந்த அறிவுரையைப்
 பண்பு நிறைந்த சடாயு சொல்லச்
செழுமை வளர்க்கும் மொழிவல்லவ
 சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திருஅழுந்தூர்ச்
 செல்வா சிற்றில் சிதையேலே. (8)

கரிய கடலைத் தொட்டனரே
 கங்கை புவிக்குத் தந்தனரே
கான வேங்கை மானினொடு
 கலந்து பயிலச் செய்தனரே
பெரிய குணங்கள் பிறங்கும் அவர்
 பிறந்த குலத்தின் பிறப்புடையேன்
பெறுதற் கரிய பெண் அணங்கின்
 பீழை அகற்றும் வலியிலனாய்
அரிய அரக்கன் புரிவினையால்
 அவலக் கடலில் அழுந்துகின்றேன்
அளியேன் என்னும் இராமன் மொழி
 அமுது நிகர்ப்பத் தருபுலவ
திரிய உணரா எமது செயல்
 சிறியேம் சிற்றில் சிதையேலே

திருவிற் பொலியுந் திருஅழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே (9)

அமர மன்னன் துயர் தவிர்க்க
அவுணர் தலைவன் தலை தடிந்த
அரசர் பெருமான் மதலையென
அடைந்தேன் வில்லும் சுமந்துள்ளேன்
குமரர் கடமை நெறி துணிந்து
குடையோ டமையு முடிதுறந்து
கொடிய கானம் புகுந்துள் ளேன்
குடியில் உயர்ந்த சனகியெனும்
தமரை இறந்த தனிக் கொடியைச்
சழக்கன் இரதத் தெடுத்தொழியத்
தளர்ந்து சாம்பி அயர்கின்றேன்
தகவோ வென்னும் இராமன் மொழி
திமிரம் அகற்றத் தருதமிழ
சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவில் பொலியும் திருஅழுந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே (10)

## 9 சிறு பறைப்பருவம்

வாய்மையொடு மரபுநிலை காத்தலுக் கெண்ணி இசை
மன்னுயிர் துறந்த வள்ளல்
மைந்தன்என வந்துமுனை பரதன்முன் தோன்றி
மகிமையும் அடைந்து நின்றாய் [வரும்
தீமைபிறர் செய்யாது காப்பது துணிந்தநீ
செய்த செயல் தீங்கில்லையோ
தேவிபுரி துயரினால் கோவியல் தருமநெறி
சிதைவுறச் செய்த வேந்தே
நாமமது பழிசெய்த நாட்டிலொடு கருமமும்
நணுகிஇக் காட்டில் ஒன்றும்
நன்குசெய்தனை யென்னும் வாலியின் பழியுரைகள்
நயமுறச் சொற்றகவினு
சேய்மையுறு புகழ்பூண்ட காரணக் கொடையாள
சிறுபறை முழக்கி அருளே
தேவர் குரு கூரர் புகழ் நாவின்மலி பாவலவ
சிறுபறை முழக்கி அருளே (1)

உம்பிஉயிர் கொள்ளுதல் துணிந்தனை மதத்தினால்
உருமையைக் கற்பழித்தாய்
உலகவியல் நன்குணரும் அறிவுள்ள மன்னன்நீ
ஒவ்வாத செயல் செய்தனை
எம்பியென இனியனும் என்னருகு வந்துதன்
இடுக்கண்கள் களைக வென்னும்
என்றாழின் மைந்தன்நின் தம்பி இமையவரறிய
என்னுயிர்த் துணைவன் ஆனான்
நம்பியடை அன்பர் துயர்போக்கி அருள்புரிவதென்
நற்குலப் பணியாதலால்

நான்உனது மார்பிடைச் சென்றுபுகு கணையினை
நன்ருய்ந்து தொட்டேன் எனும்
செம்பதும விழியுடையன் அருள்கண்ட செல்வனே
சிறுபறை முழக்கி அருளே
தேவர்குரு கூரர்புகழ் நாவின்மலி பாவலவ
சிறுபறை முழக்கி அருளே (2)

கொற்றவர்கள் பணிதாள நின்உறவு கொண்டெனைக்
கொல்லத் துணிந்த எம்பி
குணமறிதல் தேற்ருத சிற்றினச் செய்கையைக்
குறைவற விளக்கி விட்டான்
வெற்றரசை அவனெய்தி வீட்டரசை யானெய்த
விட்டுநின்ருன் அறிவிலான்
வேண்டுவதும் எம்பெரும நின்னுழையில் ஒன்றுளது
மிக்க நெறி அறிவின்மையால்
குற்றமுறு தயவினை இவனியற் றிடினுமே
கூற்றமென எவன்மேல் விடும்
குறிப்பினிற் பிழையாத பகழியினை அவனருகு
கோத்தெய்தல் தவிர்க்க நீயே
செற்றருளின் யாவருளர் எனவாலி மொழி புகல்வ
சிறுபறை முழக்கி அருளே
தேவர்குரு கூரர்புகழ் நாவில்மலி பாவலவ
சிறுபறை முழக்கி அருளே (3)

தாமரையின் விஞ்சும் எழில் வதனமது சாய்த்தனன்
தனுநெடுந் தரையில் ஊன்றித்
தாரையொடு வருமகளிர் முகமதியம் நோக்காது
தரைமகளை நோக்கி நின்றே
மாமியர்கள் குழுவின்வரு மருமகனை நிகரும்அவ்
வள்ளல் இளையோனை வாலி
மனைவியாங் கற்பரசி மைந்தநின் பாதமெம்
மனைவரப் பெற்றபேறு

பூமியிடை வாழ்பவரும் வானவரும் எய்தரிய
புண்ணியச் செல்வம் அன்றோ
பொங்கிவரும்நின் இனங் கண்டுநும் படைஞரிவர்
போதரவும் அஞ்சுகின்றார்
சேமமுற அருள்புரி எனும் அவள் சொல் தருபுலவ
சிறுபறை முழக்கி அருளே
தேவர்குரு கூரர்புகழ் நாவின்மலி பாவலவ
சிறுபறை முழக்கி அருளே (4)

ஆர்கொல்இவ் உரை சொற்ற தகையர் என
அருள்வரச் சிற்றமஃகி [உள்ளத்தின்
அருந்ததிக் கற்புடைய தாரைமுகம் நோக்கியே
அன்னையரை நினைவு கூர்ந்து
வார்படுங் குயவரையின் மணியணிகள் பூணாது
மங்கலக் கோலம்மாற்றி
வருகின்ற இவரென்னை ஈன்றஇரு தாயரையு
மானுவர் எனக்கருதியே
சோர்கின்ற இளையபெருமாள் மனத் தூய்மைநிலை
சொல்லத் தொடங்கி மெல்லத்
தூமொழிகொள் தேவியினை நாடுபணி புரிவதாச்
சொற்றது மறந்த வேந்தைத்
தேர்கவென அருள்வள்ளல் ஏவியது மொழிபுலவ
சிறுபறை முழக்கி அருளே
தேவர் குருகூரர்புகழ் நாவின்மணி பாவலவ
சிறுபறை முழக்கி அருளே

வெம்மைதரு பகைமாற்றி அரசுநிலை யிட்டதும்
வீரதையை நன்குணருவார்
வெய்யபோர் வாலிவலி மாற்றியதோர் கணையுடைய
வீரர்நீர் துணைவேண்டலீர்

உம்மையிவர் இகழ்வர்எனில் ஒருநொடியில் வாழ்
உத்தமக் கற்பரசியை [வழிவர்
உலகெங்கும் நாடிவரு துணைவேண்டி வந்துநீர்
உதவியஃதிவர் புரிவரே
தம்மைஉயர் நிலைவைத்த தகையினர்க் குதவுவினை
தன்னின்இவர் செல்வமெல்லாம்
தம்முயிரி னோடழிய விட்டிடினும் அதுபெருமை
தருமென்று தாரைசொற்ற
செம்மைசெறி மொழிகளை விளக்கவரு நாவலவ
சிறுபறை முழக்கி அருளே
தேவர்குரு கூரர்புகழ் நாவின்மலி பாவலவ
சிறுபறை முழக்கி அருளே (6)

பெரியநல் ஒளிபெறு பலவித மணியமை
பித்தியின் பத்திகளிற்
பெருகிய நிழல்களின் இடைவரும் அனுமனைப்
பெட்புறு நன்மொழியால்
கரியனும் வெளியனும் செய்யனும் ஆகவே
காட்டுவன் அதன் இயல்பால்
காணுதற் கெளியனும் அரியனும் ஆயவன்
கனிவுறும் உளம்உரையும்
அரிமுயலும் அழகனை அவன்நிகர் வுறுமென
அருமையின் மொழிபுலவா
அழகிய மலர்தொறும் மதுதெரி அளியென
அவன்வரு நெறிபுகல்வோய்
முருகனின் வளர்வுறு தமிழுறி புலவ
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் அரசென முடிபுனை கம்ப
முழக்குக சிறுபறையே (7)

கண்டனன் மீளுவன் என்றெனை அன்பொடு
கருதும் இராகவனே
கவிகுல நாயகன் எனதியல் நன்குணர்
காதலின் வன்மையினுல்
கொண்டனன் மீளுவன் என்றெணும் யாளுெரு
கோளும் இழைத்திலனே
கொடியனை யாவது பற்றினன் வாய்வழி
குருதி பெருக்கிடவே
பெண்தனி நாயகி எங்குளள் காட்டுதி
பேயனையாய் எனவே
பேசவும் வைத்திலன் எம்பெருமான் அருள்
பெற்றும் இழப்பலெனு
முண்டகன் அறிவுறு கவிபுகழ் புனைவ
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் அரசென முடிபுனை கம்ப
முழக்குக சிறுபறையே. (8)

மெய்த்திரு வாழ்வில் மேவுக என்னினும்
விட்டனை செல்கெனினும்
மெய்தெளி நெஞ்சுற இன்பொடு துன்பினை
வேற்றுமை யின்றெணியே
சித்திரம் ஒன்றில் அலர்ந்து விளங்கிய
செங்கம லத்தினையே
செம்மையில் நோக்கும் முகங்கொளும் நாயகன்
சீர்மை நினைந்துருகும்
பத்தினி சானகி பண்பினை நன்குசொல்
பாவல பைந்தமிழால்
பாரவர் வாழ்வுற ஏரியல் எழுபது
பாடிய நாவலவ
முத்தியின் வாழ்வு விளங்குக என்ள
முழக்குக சிறுபறையே

முத்தமிழ் அரசென முடிபுனை கம்ப
முழக்குக சிறுபறையே. (9)

மேருவை உருவவும் விண்ணது பிளக்கவும்
விரிபுவ னங்களையே
வேரற நூறவும் வேண்டுவ தென்னினே
வில்லின் நுழைந்தனவே
ஆரியன் அம்புகள் வல்லன என்ப
தறிந்தும் அயர்த்தனையே
அஞ்சினை ஆதலின் அன்றெனை மானிடெ
டற்றம் அறிந்தடைவாம்
வீரமும் வலிமையும் நிறையொரு பறவையின்
விளிய இருந்தனையே
விண்ணவன் வாளினில் வென்றனை யீங்குளை
வீரதை யுள்ள னையோ
மூரியை எனவளை மொழிதரு நாவலன்
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் அரசென முடிபுனை கம்ப
முழக்குக சிறு பறையே. (10)

## 10. சிறுதேர்ப் பருவம்

மும்மையாம் உலகங்கள் முறைமையால் தருபணியின்
முயல்கின்ற முதல்வனுக்கு
முதல்வனென மறை சொல்லு மெய்யறத் துணையாய
மூர்த்தியின் தூதனுகி
அம்மையே அத்தனே அருள் நிலையம் என்னையான்
ஆர்வமுற உயிர் தந்தனை
அருளறம் பூண்டநின் உதவிக்கு மாறுக
அளியள் யான் செய்வதுளதோ
இம்மையே மறுமையினில் எய்துமின் பெய்தவே
இசையினெடு வாழ்வித்தனை
யான் தவக் கற்புடையள் என்னில்நீ இன்று போல்
என்றுமே வாழ்வாய் எனச்
செம்மையால் அனுமனைச் சிதைஅருள் புனைபுலவ
சிறுதேர் உருட்டி அருளே
திருமேவு குருகூரர் அருள்பாடு திருவாய
சிறுதேர் உருட்டி அருளே. (1)

இருங்கடலை இத்துணைச் சிறியதோர் யாக்கையினை
எங்ஙனந் தத்தி வந்தாய்
இயற்றிய தவத்துதவி உள்ளதோ சித்தியோ
என்று சானகி வினவவே
சுருங்கும் இடை நின் உரிய துணைவன் இருதூயதாள்
தோன்ற வுணர் நெஞ்சமுடையோர்
தொலைவரிய மாயைப் பெருங்கடல் கடந்தெளிது
சொல்லற்ற நிலையுறுதல் போல்
கருங்கடலை என் வலிமை ஒருசிறிதும் இன்றியே
காலிற் கடந்தேன் எனக்

கவிஞரினும் அறிவுமிகும் அனுமனது பணிவுமொழி
கட்டுரைத் திடு செல்வனே
திரும்பரிய பெருவாழ்வு நாவினல் தருபுலவ
சிறு தேர் உருட்டி அருளே
திருமேவு குருகூரர் அருள்பாடு திருவாய
சிறுதேர் உருட்டி யருளே. (2)

இலங்கை எனும் வெற்பினிடை நற்பெரும் தவமுள்ள
இறைவியைக் கண்டேன் அலேன்
இற்பிறப் பரியபொறை கற் பென்னும் முக்குணமும்
எழில்நடம் இயற்றல் கண்டேன்
வலங்கை என உடன் வந்த உம்பி மெய்யன்பினல்
விளைந்த ஒரு சாலையின் கண்
வாய்ப்புடைய மாதவஞ் செய்ததவ மாம்தையல்
வாழ்கின்ற வாறு கண்டேன்
கலங்க உலகினை வாட்டு தசமுகனை மரபிஞெடு
கனலியின் அழிக்கவல்ல
கற்பினுக் கணியாய தேவியினை யடியனேன்
கண்களாற் கண்டே னெனச்
சிலம்புமஉரை அனுமன்தன் வாயினல் சொரிபுலவ
சிறுதேர் உருட்டி அருளே
திருவாய் மொழிப் புலவர் பொருள் தேரியற்கவிஞ
சிறுதேர் உருட்டி அருளே. (3)

கோனகரம் முழுவதுவும் நின்னுடைய கொற்றமும்
குலவும்உல கன்னை ஆய
கோச்சனகன் மகள்கற்பின் வெந்ததெனஅறியாது
கோட்டிடை இருந்து வாழும்
வானரஞ் சுட்டதென நெஞ்சுறத் துணியும்இது
மாட்சியோ சூழ்ச்சியாமோ
மானுட மடந்தைதவம் மீனுடை நெடுங்கடலின்
வாழுநகர் ஈதழியவே

தானமையும் என்றுமுனம் யாம்அறியும் வாய்மை
[மொழி
தன்னையும் மறந்து நின்றாய்
தானவரின் மிக்ககன கன்தனையும் அன்றுதெறு
சத்தனிவன் என வீடணன்
தேன்அனைய மொழிகளை அளந்துதரு செவ்வாய
சிறுதேர் உருட்டி அருளே
திருவாய் மொழிப் புலவர் பொருள் தேரியற் கவிஞ
சிறுதேர் உருட்டி யருளே. (4)

சீதையினை மீட்கவோ தேவரொடு மானிடவர்
தீங்குற அடர்த்த கொடிய
செயலுடை இராவணனை மரபினொடு மாய்க்கும்வினை
தேடி உறு விரதம் இதுவே
வேதியர்கள் அபயம் என அன்று நான் ஓதிவரு
மெய்ம்மை மொழி பழுதுபடுமோ
மிக்கதா யினும் ஆக அல்ல தாயுனும் ஆக
வேறென்றும் எண்ணல் ஒல்லேன்
ஆதலால் அபயமெனும் மொழிகேட்ட அளவினே
அளித்துளேன் அபயதானம்
அன்பினால் கூறுவன கூறினீர் நீவிரென்
றடைக்கலப் பெருமை சொற்ற
தீதகல் இராமன் மொழி ஓதியுரு கனிவாய
சிறுதேர் உருட்டி அருளே
திருவாய் மொழிப் புலவர் பொருள் தேரியற்கவிஞ
சிறுதேர் உருட்டி அருளே. (5)

அயர்வுற் றனை இனி ஆள்என வந்த
அனைத்தும் மருத்தின் முனே
அழிவுறு பிளையின் விளிவது கண்டனை
யாதலின் இன்று செல்வாய்

செயலுற் றனையெனில் நாளை அடைந்தனை
தேர்வுறு போர் புரிவாய்
தீதகல் மெய்ம்மை அறத்துணை இன்றியே
தேவரும் வெற்றி பெறார்.
மயர்வுற் றொருசிறை யிட்டுள மங்கையை
வந்திவண் விட்டனையேல்
வாழ்வினில் வாழுதி அன்றெனின் மாறுதி
வஞ்ச அரக்க வென
உயர்வுக் குரியவன் வாய்மை விளம்பி
உருட்டுக சிறுதேரே
உலகப் புலவருள் உயர்வுக் குரியன்
உருட்டுக சிறுதேரே. (6)

நீருறு கோல நிகர்ப்புறு வாழ்வினை
நிலைஎன நச்சிளனை
நெடிது வளர்த்தமர் புரிகென விட்டவன்
நினைவு சிதைந்திடவே
காருறு மேனியன் அடியிணை கூடு
கருத் தொடும்அங் கடையேன்
காதல வெனதுயிர் துயரறு நிலையது
கருதினை யாமெனினே
நேருற அருளுரு உடையதொர் பொருளினை
நீஅடை கென் றுரையா
நேயம் விளக்கிய குடநிகர் காதினன்
நிலைமை புகன்றருள்வாய்
ஊரென உலகினை உடையவ கம்ப
உருட்டுக சிறு தேரே
உலகப் புலவருள் உயர்வுக் குரியன்
உருட்டுக சிறு தேரே. (7)

குலம்புரி பாவ வினைப்பய னுய
கொடும்பழி தேடியுளேம்

கோபம் எழுந்திடின் மூன்றுலகங்கள்
கொளுத்தும் இலக்குவனே
வலம்புரி ஆழிகொள் மால்படை நின்று
வலஞ்செயும் மேலவனை
மற்றினி வலியன யாவுள எந்தை
மனத்து மயக்கொழியா
நலம்புரி நெஞ்சொடு சானகி நங்கையை
நாயகர் பால் விடுதி
நன்னெறி ஈதென இந்திர சித்து
நவிற்றிய நீதிமொழி
உலம்புரி தோளினன் முன்சொலு நாவன்
உருட்டுக சிறுதேரே
உலகப் புலவருள் உயர்வுக் குரியன்
உருட்டுக சிறுதேரே. (8)

போர்மகள் கலைமகள் புகழ்மகள் எனும்இவர்
புரிவொடு தழுவுறவே
போகம் அடைந்துயர் வாழ்வின் இருந்தனை
போதம் இழந்தனையே
சீர்மகள் திருமகள் தேவரும் அறிவரு
தெய்வக் கற்புடையாள்
சீதைஎனும் பெயர் மாமகளைப்பெறு
திமை நினைந்தனையே
பார்மகள் தழுவிய உரனொடு வீழ்ந்தனை
பாவ வினைப்பயனால்
பழியி னிழிந்த இராவண என்று
பகர்ந்தருள் வீடணனால்
ஓர்மகள் செம்மை உணர்த்திய நாவன்
உருட்டுக சிறுதேரே
உலகப் புலவருள் உயர்வுக் குரியன்
உருட்டுக சிறுதேரே. (9)

எண்ணில கோடி இராமர்கள் என்னினும்
இன்னருள் நின்னிகரோ
இன்றவன் வந்திலன் என்னினும் நாளையுள்
எய்துவ துறுதியரோ
புண்ணிய மெய்யை நிகர்ப்புறும் நின்னுயிர்
போக்க நினைந்தனையேல்
புவியொடு வானுறை உயிர்கள் அழிந்தொழி
புதுமை விளைந் திடுமே
பெண்ணியல் நிறையுறு சனகியோ டிளையவன்
பினர்வர வனம்அடைவோன்
பேசிய வாய்மொழி நின்னுழை யுளததது
பின்றுதல் புரிகிலன் என்
றெண்ணுதல் கோசலை உரை நவில் கம்பன்
உருட்டுக சிறுதேரே
உலகப் புலவருள் உயர்வுக் குரியன்
உருட்டுக சிறு தேரே. (10)

அஞ்சனை காதலன் அரியணை தாங்குற
அங்கதன் வாளமுடன்
அருகுற வெண்குடை பரதன் எடுத்திட
அழகமை வெண்கவரி
வஞ்சனை அற்ற சுமித்திரை யின்றருள்
மைந்தர் இரட்டுறவே
மகிழ்வுறு சானகி யருகினில் ஓங்குற
வள்ளல் இருந்தருள
விஞ்சிய கொடைபொழி சடையன்நல் மரபினர்
வேண்டினர் தந்திடலும்
வேத வசிட்டனும் மாமணி முடியினை
வேய்ந்தனன் என்றருளி
உஞ்சிடு நெறியினை ஓதிய கம்பன்
உருட்டுக சிறுதேரே
உலகப் புலவருள் உயர்வுக் குரியன்
உருட்டுக சிறுதேரே. (11)

### வாழ்த்துரை

வாழிய கலைமகள், வாழிய திருமகள்,
வாழிய சிலைமகளே,
வாழிய அயன்அரி அரன்என நின்றருள்
வள்ளலின் வண்கழலே,
வாழிய அறநெறி, வாழிய பொறுமையில்
வளர்வுறு தவநெறியே
வாழிய தமிழ்மொழி, வாழிய வடமொழி,
வாழிய பிறமொழியே,
வாழிய சனகியின் அருளொடு தசரதன்
மதலையின் மெய்ப்புகழே
வாழிய வான்மிகர் கழன்மலர் குருகையின்
மாமுனி புகழ் மணமே
வாழிய தமிழ்மொழி உலகினுள் உயர்வுற
வந்தருள் மெய்ப்புலவர்
வாழிய காவிரி நாடுறு கம்பன்
வழங்கிய வண்கவியே.

கம்பன் வாழ்க!

கம்பன் புகழ் வாழ்க!!

கன்னித் தமிழ் வாழ்க!!!

# விறலிவிடு தூது



ஆசிரியர் :

**சதாவதானம் சரவணப் பெருமாட் கவிராயர்**

பதிப்பாசிரியர் :

**ராய. சொ.**



இந்நூல் சிற்றின்ப சம்பந்தமாக எல்லை கடந்து சென்றிருக்கின்றது என்பது உண்மையே. ஆயினும் கடவுளைப்பற்றி இந் நூலில் காணப்படும் பக்தி ததும்பும் வரிகள் மயிர்க்கூச்சை உண்டாக்குகின்றன.

கலிகோ ரூ. 3 0 0

சாதா ரூ. 2 8 0

S. I. P. Karaikudi R/10. 800